# வீரசைவ மரபியல்





சோ. பரமசாமி B.Sc.

# வீரசைவ மரபியல்







சோ. பரமசாமி, B. Sc.





முதற் பதிப்பு : 1995


**வீரசைவ மரபியல்**

ஆசிரியர் : சோ. பரமசாமி, B. Sc.
முகவரி : "பாக்கிய வாசம்"
இணுவில் தெற்கு,
இணுவில். (இலங்கை)
வெளியீடு : திருநெறிய தமிழ் மறைக் கழகம்
ஸ்ரீ பரராஜசேகரப்பிள்ளையார் கோயில்,
இணுவில்.
அச்சுப் பதிப்பு : திருமகள் அழுத்தகம், சுன்னாகம்.
விலை : [redacted]/- 80/=

First Edition : 1995


**VEERASAIVA MARAPIYAL**

Author : S. Paramasamy, B. Sc.
Address : "Packiya Vasa"
Inuvil South,
Inuvil, (Sri Lanka)
Publishers : Thiruneriya Thamil Marai Kazhagam
Sri Pararajasekara Pillaiyar Temple,
Inuvil.
Printers : Thirumakal Press,
Chunnakam.
Price : [redacted]-/ 80/=



# சமர்ப்பணம்

இம்மண்ணில் தவழவிட்டு
வாழ்வு மலர முன்னே
தனியாக விட்டுப் பிரிந்த
எனதருமை
**முன்னறி தெய்வங்களுக்கு**
அன்புக் காணிக்கை.

— சோ. ப.

# உள்ளடக்கம்



---



# முன்னுரை

சைவப் பண்பாட்டு மரபியல், வடமொழி வேத சிவாகமங்களை அடிப்படையாகக் கொண்டது. வேத சிவாகமங்களின் சாரமாகச் சைவத் திருமுறைகளும், சாத்திரங்களும் அமைந்துள்ளன. அவை தமிழ் மொழியில் இருப்பதால் தமிழ்வேதம் என்பர். இவை யாவும் வைதிக சமயத்தின் ஓர் இறுக்கமான கட்டுக் கோப்பில் வளர்ந்துள்ளன. இந்த வைதிகப் போக்கில் ஈடுபட்ட மக்களைப் பக்திநெறி மூலம் இறை இன்பங் காணச் செய்யும் சமய நெறியே வீர சைவம் ஆகும்.

வீரசைவம் பழைமையானது. இறை அன்பில் திளைக்க வைக்கும் இந்நெறி தனித்துவமாய்த் தழைத்துள்ளது. இது சைவசமயத்தின் ஓர் அங்கமாய்க் கொள்ளப்படுகிறது.

இந்நெறி முறை மக்கள் சமுதாயத்தில் நீண்ட காலமாக நிலவி வருவதால் இது ஒரு மரபாக மதிக்கப்படுகிறது. பாரதத்தில் தோன்றிய இம்மரபு கன்னட மாநிலத்திற் பெருமளவு வேரூன்றி, அங்கிருந்து தமிழகம் உள்ளிட்ட மத்தியப் பிரதேசம், வட மாநிலங்களுக்கும் பரந்து, அதற்கும் அப்பால் கடல் கடந்த நாடுகளிலும் விரிவடைந்துள்ளது. ஓரிடத்து நடைமுறை இன்னோரிடத்திற் பின்பற்றும் பொழுது, அவ்விடத்துப் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப மாறுதலடைதல் தவிர்க்க முடியாததாகும்.

பிரசார வேலைகளிற் காலம் போக்காத வீரசைவம் கடவுள் வழிபாட்டிற் கவனம் செலுத்துவதால், இது பற்றிய அறிவை ஒரு பகுதியினர் மட்டுமே தெரிந்து வைத்துள்ளனர். சமூகத்தில் இந்நெறியைப் பின்பற்றுவோர் ஒரு சமூகமாகக் கருதப்படுகின்றனர். ஆயின், தாய்த் தமிழகத்தை நோக்குவோர்க்கு இது ஒரு சமூகத்தவர்க்கு மட்டும் உரியதன்று என்பது தெரியவரும்.

மறுமலர்ச்சியும் புத்துணர்வும் மேலோங்கிவரும் இந் நாளில், பலதுறை சார்ந்த கற்கை நெறிகளும் ஆய்வுகளும் உயர்கல்வி மட்டத்தில் மேற்கொள்ளப்படுகின்றன. இந் நோக்கிலே பல்கலைக்கழகத்தில் இந்து நாகரிகம் ஒரு பாட மாகப் போதிக்கப்படுகிறது. அதனால் கல்லூரிகளில் உயர் தர வகுப்புக்கு இந்து நாகரிகம், இந்து சமயம் ஆகிய பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. அதற்குரிய பாட விதானத்தில் வீரசைவம் ஓர் அம்சமாக இடம் பெற்றிருத் தல் வீரசைவ நெறிக்குப் புத்தூக்கம் அளிக்கின்றது.

பண்பாட்டுச் சிந்தனை வளர்ந்து வரும் இக் கால கட்டத்தில், வீராகமம் போன்ற வீரசைவ நூல்களைப் பெறு தல் அரிதாயிருப்பதால், அந்நெறியின் விவரங்களை அறி வதற்குப் பல மாணவர்கள் எம்மிடம் வருவதுண்டு. அவர் களுடன் கலந்துரையாடிய போது, அறிந்தவற்றைப் பிற ருக்கும் உதவும் வகையில் நூலாக வெளியிடுமாறு பலரும் தூண்டினர். அவர்கள் தந்த ஊக்கமே இம்முயற்சியிற் கவ னத்தைத் திருப்பியது.

காலத்தின் தேவையைக் கருத்திற் கொண்டு இந்நூலை எழுதுகையில் மாணவர்கள் மாத்திரமன்றிப் பொது வாச கர்களையும் சிந்திக்க வேண்டி இருந்தது. எனவே, வீரசைவம் பற்றிய பொதுத் தகவலுடன் இந்நாட்டில் அது பேணப் படும் பாங்கினை உள்ளடக்கி **வீரசைவ மரபியல், வீரசைவம் வளர்த்த சான்றோர், வீரசைவக் கிரியை இயல்** என மூன்றாக வகுத்துச் சுருங்கிய வடிவில் இந்நூல் ஆக்கப்பெற்றுள்ளது. விரிவான ஆய்வுகளுக்கு இதுவொரு முன்னோடி முயற்சி எனலாம்.

இந்நூலில் ஈழத்து வீரசைவப் பழங்குடி மக்களின் வாழ்க்கை முறைகளைச் சுட்டிக் காட்டுதல் பொருத்த மெனத் தோன்றியது. ஆகவே கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த வீரசைவர்கள் பற்றிச் சுன்னாகம் ஸ்கந்தவரோதயக்



கல்லூரி முன்னாள் அதிபர் வி. சிவசுப்பிரமணியம் B. A., B. Sc, P. G. T. அவர்களுடனும், தம்பட்டடைக் கிராமத்தைச் சேர்ந்த திரு. சோ. கணேசமூர்த்தி அவர்களுடனும் உரை யாடியதன் மூலம் பெற்ற தகவல்கள் இங்கு குறிப்பிட உதவியாயின. அத்துடன் வடபுலத்தில் வதிவோர் பற்றி யும் **வீரசைவக் கிரியை இயல்** பற்றியும் எழுதுவதற்கு உறுதுணையாய் வீரசைவக் குரு, பண்டித வித்துவான் இ. நவரத்தினக் குருக்கள் பல வகையில் உதவியுள்ளார். இன்னும் சிலர் பயனுறத் தக்க நூல்களைத் தந்து ஆதர வளித்தனர்.

இதற்கு மேலாக, இச்சிறு நூலுக்கு யாழ். பல்கலைக் கழக இந்து நாகரிகத் துறைத் தலைவரான பேராசிரியர், கலாநிதி ப. கோபாலகிருஷ்ணன் அவர்கள் வழங்கிய அணிந்துரை இதனை அணிபெறச் செய்கின்றது.

இவ்வாக்கம் நூலுருப்பெற வேண்டுமெனச் சிலர் ஊக்க மளித்தபோது, சண்டிலிப்பாய் பிரதேச செயலகச் சமூக சேவை உத்தியோகத்தர் திரு. அ. அமிர்தலிங்கம் அவர்கள் ஏற்ற ஆலோசனை வழங்கினார். மேலும், இதற்கான அட்டைப் படத்தை ஓவியர் இ. கணேசன் அவர்களும், அச்சு வேலையைச் சுன்னாகம் திருமகள் அழுத்தகத்தினரும் அழகுறச் செய்துள்ளனர்.

பல வகையிலே இந்நூலின் சிறப்புக்கு உதவிய அனை வருக்கும் அன்பார்ந்த நன்றிகள் உரித்தாகுக.

இந் நூல் இணுவில் திருநெறிய தமிழ்மறைக் கழக வெளியீடாக வெளிவரத் தோன்றாத் துணையாய் இருந்த ஸ்ரீ பரராஜசேகரப் பிள்ளையாரின் திருவடிகளை உளமாரப் பிரார்த்திக்கின்றோம்.

இணுவில்.

**சோ. பரமசாமி**

உ

# அணிந்துரை

பேராசிரியர் ப. கோபாலகிருஷ்ணன் அவர்கள்
தலைவர், இந்து நாகரிகத் துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம்.

'மேன்மை கொள் சைவநீதி' உலகெங்கணும் வாழும் சைவ மக்களிடையே விளங்கி வருகின்றது. தொன்மையும் பெருமையும் வாய்ந்த இச் சமயம் சமயாதீதப் பழம் பொருளாய சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. இச் சமய மரபில் உள்ள பல்வேறு பிரிவுகளுள் வீரசைவமும் ஒன்றாகும். இச் சமய மரபுக்கு 'வீர' என்ற அடைமொழி இடம் பெற்றுள்ள சிறப்பு உய்த்துணரற்பாலது. சிவனது திருவிளையாடல்களில் "அட்டவீரட்டங்கள்" முக்கியத்துவம் பெறுவன. "முப்புரம் எரித்த விரிசடைக் கடவுளுக்கு" வீர அம்சம் சிறப்பாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. வீரசைவ மரபுக்குத் தனி வரலாறு உண்டு; வழிபாட்டு மரபுகளும் உள்ளன. வீரசைவம், இலிங்காயத சமயம் எனவும் வழங்கப் படுகிறது. இலிங்கத்தை எப்போதும் உடலில் அணிந்திருப் பதினால் உடலிலுள்ள மாசுகள் எரிக்கப்பட்டு விடும் என்பது இச்சமய நம்பிக்கை. ஆகமங்களுள் வீராகமம் இச்சமய மரபோடு நெருங்கிய தொடர்புடையது.

திரு. சோ. பரமசாமி அவர்களது ஆக்கமான '**வீரசைவ மரபியல்**' என்ற இந்த நூல், இச்சமய மரபின் பல்வேறு அம்சங்களை எளிமையாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூற முற்படுகிறது. தாம் சார்ந்துள்ள சமய மரபு பற்றிய தெளிவினைப் பலரும் அறிய வேண்டும் என்ற நோக்கிலே



எழுத்தில் கொண்டு வந்துள்ள ஆசிரியரின் முயற்சியைப் பாராட்டுவதில் மகிழ்ச்சியடைகின்றோம். வீரசைவம் பற்றிப் பலரும் எழுதியுள்ளனர். ஆசிரியரின் இம்முயற்சி ஈழத்து வீரசைவ மரபு பற்றி விசேடமாக ஆராய முற்படுகின்றது.

இந்நூலின் முதற் பகுதி வீரசைவ மரபு பற்றியது. இதில் வீரசைவத்தின் தொன்மை, வளர்ச்சி, அதன் மூல ஆசாரியர்கள், வீரசைவத்தின் மூவகைத் துறைகளாகிய பஞ்சாசாரம், அட்டாவரணம், சடுத்தலம் ஆகியவை பற்றி விபரிக்கின்றது. தொடர்ந்து ஈழத்தில் வீரசைவம் பற்றி எடுத்துக் கூறுகின்றது. வீரசைவர்களது வாழ்க்கை முறை, அவர்கள் வாழும் பிரதேசம், அம்மரபின் மேம் பாட்டிற்கு உழைத்த பெரியார்கள் ஆகியவை விபரிக்கப் பட்டுள்ளன.

அடுத்த பகுதியிலே வீரசைவம் வளர்த்த சான்றோர் வரிசையில் ஆறு பெரியார்களின் வரலாறு இடம் பெறுகின் றது. இறுதியாக வீரசைவக் கிரியை இயலில் பூர்வக் கிரியை மற்றும் சமாதிக் கிரியை போன்ற விபரங்கள் இடம்பெறு கின்றன. வீரசைவம் பற்றிய ஒரு பரிமாணத்தை அறிய இத்தகைய அம்சங்கள் வகை செய்கின்றன. இந்நூலில் இடம் பெறும் சில கருத்துக்கள் மேலும் விரிவான ஆராய்ச் சிக்குரியவை.

இந்நூலின் ஆசிரியர் திரு. சோ. பரமசாமி விஞ்ஞானப் பட்டதாரியாவார். இவர் அரச திணைக்களத்தில் பட்டதாரி மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றியவராயினும், சமயத் துறையில் ஆர்வமும் ஈடுபாடும் உடையவர். கொழும்பில் இயங்கும் ஈழத்துத் திருநெறித் தமிழ் மன்றத்தின் ஆதரவில் வெளிவந்த "மெய்கண்டார் நெறி" என்ற மாத சஞ்சிகையின் ஆசிரியராகப் பணியாற்றிய அனுபவமும் இவருக்குண்டு. சமயத்

துறையில் பல்வேறு நிலைகளில் பணியாற்றிய அனுபவப் பேறாக ஆசிரியரின் வீரசைவ மரபியல் என்ற நூல் வெளி வருவது அனைவராலும் வரவேற்கப்பட வேண்டிய நன் முயற்சியாகும். வீரசைவம் பற்றி அறிய விரும்பும் அனை வருக்கும் இந்நூல் சிறந்ததொரு அறிமுகமாக அமைகின்றது. அத்துடன் வீரசைவ மரபினருக்குத் தாம் சார்ந்துள்ள சமய மரபின் தோற்றம், வளர்ச்சி, சிறப்பு என்பன பற்றி அறிவ தற்கும் இந்நூல் துணை செய்கிறது. மக்களுக்கு இத்துறை சார்ந்த ஒரு விளக்கத்தையும் தெளிவையும் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் ஆசிரியர் எழுதி வெளியிடும் இந் நூலை அனைவரும் வரவேற்பர் என்பதில் ஐய மில்லை.

திரு. சோ. பரமசாமி அவர்கள் மேலும் இது போன்ற சமயத்துறை சார்ந்த பல்வேறு ஆக்கங்களைத் தமது அனுபவத்தின் பெறுபேறாக எழுதி வெளியிட்டுச் சைவ உலகுக்கு நற்பணியாற்றச் சகல நலன்களும் கிட்டும் வண்ணம் எல்லாம் வல்ல ஸ்ரீபார்வதி சமேத பரமேசுவரனின் திருவருள் பொலிவதாகுக.

07 - 08 - 1995 ப. கோபாலகிருஷ்ணன்

உ

# வீரசைவ மரபியல்

**அறிமுகம் :**

நாரணனும் நான்முகனும் தேடிக் காணமுடி யாத கடவுள், சிவபெருமான். அவர் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; சொற்பதங் கடந்த தொல்லோன்; அநாதியே மலபந்தம் இல்லாத மாமணிச் சோதி. அன்பே வடிவான சிவன், அன்பர் அகத்தினில் கோயில் கொள்ளும் அருங்குணம் படைத்தவர். அன்பினால் அடியார் உள்ளத்தில் இடம் கொண்ட இறைவனுக்குச் செய்யக் கூடிய கைம்மாறு யாதொன்றும் இல்லை என்பது திருவா சகம் பாடிய மணிவாசகரின் சிந்தனைத் தெளிவு.

அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய் இலங்கும் சிவனை அடைந்து முத்தி பெறுதலே மானிடப் பிறப்பின் நோக்கமாகும். செழுஞ் சுடர்ச் சோதியான சிவபரம் பொருளைச் சேரும் நெறி யினைச் செப்பும் சமயம் சைவ சமயம். இதனைச் சிவ சமயம் என்றும் கூறுவர். சிவனுக்குப் பரத் துவம் (இறைமை) கூறும் சைவம் இந்து சமயத்தில் தொன்று தொட்டு வழங்கி வரும் வைதிக சமயங்கள் (சைவம், வைஷ்ணவம், சாக்தம், காணபத்தியம், கௌமாரம், சௌரம் ஆகிய) ஆறினுள் ஒன்றாகும்.

**சைவ சமயம் :**

ஊரும் பேரும் இல்லாத ஒப்பற்ற சிவனைப் பரம் பொருளாகக் கொண்ட சமயமே சைவ சமயம். அணைந்தோரைக் காக்கின்ற அரனார் திருவுருவை மனம், மொழி, மெய்களால் வணங்குபவர் சைவ சமயத்தவர். முதலும் ஈறும் இல்லா முழுமுதற் கடவுளைச் " செழுஞ் சுடர்க் குன்று " எனத் திருமுறை இயம்பும். அவ்வருட் கடவுளின் பேராற்றலைக் கூறவந்த திருமூலர் " சிவன் பெருந் தன்மை " என்ற சொற்றொடர் மூலம் சுட்டிக் காட்டியுள்ளார்.

" கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை "

என்பது வள்ளுவர் வேதம்.

சமயாதீதப் பழம் பொருளாய சிவனை முழு முதல் தெய்வமாகக் கொண்ட சைவ சமயம் இராசாங்கத்தில் அமர்ந்தது எனத் தாயுமானவர் கூறுவர். " அயர்வுறச் சென்னியில் வைத்து இராசாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவம் " எனத் தம் பாடலிற் குறிப்பிட்டுள்ளார். அதனாலேயே " சந்தான கற்பகம் போல் அருளைக் காட்டத்தக்க நெறியிந் நெறியேதான் " என்று வைதிக நெறியின் செம்மையைத் தாயுமானார் அறுதியிட்டுக் கூறியமை நோக்குதற்குரியது.

சிவன் பெருந்தன்மையை உலகெங்கிலும் உள்ள மக்கள் இன்று உணரத் தொடங்கி விட்டனர். அதனால் சிவனை வழிபடுவோர் உலகின் எல்லா



நாடுகளிலும் உள்ளனர். அகச் சமயம் ஆறினுள் சைவ சமயம் மிகமுக்கிய சமயமாகக் கருதப்படுகிறது. சைவ சமயத்தின் பிறப்பிடமான பாரதத்தில் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை சைவர்கள் பரந்து வாழ்கின்றனர். நேர்பாளத்தில் உள்ள பசுபதிநாதர் ஆலயம் முதல் திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் ஆலயம் வரை இந்தியா முழுவதும் சிவாலயங்கள் பரவியுள்ளன.

**சைவத்தின் பிரிவுகள் :**

சைவாலயங்களும் சைவ சமயத்தவர்களும் பாரத தேசம் முழுவதும் பரவியுள்ள போதிலும், சைவ சமயத்தை அனுட்டிப்போர் இடத்துக்கு இடம் சிற்சில வேறு பாடுகளுடன் அதன் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து ஒழுகுகின்றனர். ' சைவ சமயமே சமயம் ' என்றும் ' சமயாதீதப் பழம் பொருள் ' என்றும் ' சைவத்தின் மேற் சமயம் வேறில்லை ' என்றும் பேசப்படும் சைவத்தில் ஆறு நெறிகள் உண்டு. பாசுபத சைவம், காஷ்மீர சைவம், கோரநாத் சைவம், சிவ அத்வைதம், சுத்தாத்வைத சைவ சித்தாந்தம், வீரசைவம் ஆகிய ஆறுமே அப்பிரிவுகளாம்.

**பாசுபத சைவம்:**

சைவ தர்மங்களிலே மிகப் பழைமையானது பாசுபத சைவம். இந்தச் சமயத்தைச் சார்ந்தவர்கள் ஏறக்குறைய 2500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இமாலயப் பகுதிகளில் தவமியற்றி வந்தனர் என வரலாறு கூறுகின்றது. சைவ சமயப் பற்றுடைய

சாதுக்கள் சிவக்கோலம் தாங்கிக் கடு விரதங் காத்த இச்சமயத்தவர், எல்லோரையும் பேதமின்றித் தம்முடன் சேர்த்து வாழ்ந்தனர். வடஇந்தியாவில் வேதியர் பலர் இதிற் சேர்ந்து பிரமச்சரியம், சைவ உணவு ஆகிய பழக்கங்களைப் பேணி வந்தனர். அத்துடன் இயமம், நியமங்கள் தவறாது தூய்மையைக் காத்து ஒழுகினர்.

இப்பிரிவினரின் முக்கியமான ஆலயம் குஜராத்தில் உள்ள சோமநாதர் ஆலயமாகும். ஏறக்குறைய 2200 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த லகுவீரர் என்னும் சிவனடியார் இம்மாநிலத்தில் சைவம் தழைக்கச் செய்தார். இம்மதக் கோட்பாடு கி.பி. 08 ஆம் நூற்றாண்டில் நேர்பாளத்துக்கும் பரவியது என வரலாறு மூலம் தெரியவருகின்றது.

**காஷ்மீர சைவம் :**

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் காஷ்மீர் பகுதியில் தொடக்கப் பெற்ற சைவ சமயம் காஷ்மீர சைவம் அல்லது பிரதியாபிக்ஞான தரிசனம் எனப் பெயர் பெற்றது. இச்சமயம் மக்களிடையே நன் மதிப்புப் பெற்றதால் விரிவடைந்து நேர்பாளத்துக்கும் அதனை அடுத்துள்ள பகுதிகளுக்கும் பரவலானது. உலக நாடுகளில் சிவனைப் பரம் பொருள் என மதிக்கும் சைவசமயமே அரச சமயமாகக் கொண்டுள்ள நாடு நேர்பாளம் ஆகும்.

காஷ்மீர் அரசரான அவந்திவர்மன் எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் சிவபிரானின் அருளைப் பெற்றார். இறைவனது அருளுக்கு ஆளான மன்னர்



சைவ ஆகமங்களுக்கு விளக்கம் நாடிப் புறப்பட்டார். செல்லும் வழியிலே மகாதேவ மலையில் வாழ்ந்த வாசுகுப்தர் என்பவரைச் சந்தித்து, அவர் வாயிலாக விளக்கங்களை அறிந்து கொண்டார். இவ்வாறு உருவான சிவ சூத்திரங்களே இந்தப் பிரிவின் அடிப்படைக் கோட்பாடுகளாக விளங்குகின்றன.

இந்தவகையில் நோக்குமிடத்து காஷ்மீர சைவத்தின் முதலாசிரியர் வாசுகுப்தர் என்பதும் சிவன் அருளால் உருவான சிவசூத்திரங்கள் என்ற நூலைக் குப்தர் தமது சீடர்களுக்கு உபதேசித்தார் என்பதும் காஷ்மீர ஆசாரிய பரம்பரை இவரிலிருந்தே தொடர்ந்து வருகின்றது என்பதும் அறியற்பாலது.

வாசுகுப்தரின் சீடரான கல்லாடர் என்பவர் ஸ்பந்தகரிகா என்ற நூல் மூலம் சிவ சூத்திரங்களுக்கு விளக்க உரை எழுதியுள்ளார். அவரின் இன்னொரு சீடரான சோமானந்தர் சிவதிருஷ்டி என்ற நூலை எழுதியுள்ளார். இவை காஷ்மீர சைவத்தின் தத்துவ நூல்களாக விளங்குகின்றன. சிவஞானம், சிவ பக்தி இரண்டுமே இந்தத் தத்துவத்தின் இரு முக்கிய அம்சங்களாகும்.

காஷ்மீர சைவம் மொகலாயர் படையெடுப்புக்குப் பின் ஒதுக்கப்பட்டிருந்தது. அண்மைக் காலத்தில் இது இந்தியாவின் பிற பகுதிகளிலுள்ள சிவனடியார்கள் மூலம் புத்துயிர் பெற்

றுள்ளது. இதனைப் பிரபலமடையச் செய்தவர் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த பாபா முக்தானந்தா சுவாமிகளாகும்.

சுவாமி வாசுகுப்தரின் பரம்பரையில் வந்த குருநாதராகச் சுவாமி லக்ஷ்மன்ஜீ விளங்குகிறார். கடுமையான கட்டுப்பாட்டுக்கும் தீவிர சிவபக்திக்கும் சான்றாக விளங்கும் காஷ்மீர சைவத்துக்கு இன்று அமெரிக்காவிலும் ஏராளமான பக்தர்கள் உளர்.

**கோரநாத் சைவம்:**

பத்தாம் நூற்றாண்டில் இமாலயப் பகுதியில் தோன்றிய கோரநாத் சைவம் என்ற மதம் நாத சம்பிரதாய முறைப்படி அமைந்த ஆதிநாதர் பரம்பரையில் வந்த அமைப்பாகும். சித்த சித்தாந்தப் பத்ததி என்னும் சாத்திர நூலை எழுதிய கோரநாத் என்ற சிவயோகி சித்துகள் செய்வதில் மிகவும் வல்லமை படைத்தவர். இவர் நேர்பாளத்தைச் சேர்ந்த மத்ஸ்யேந்திர நாதரிடம் ஏறக்குறையப் பன்னிரண்டு ஆண்டுகள் நாதயோகத்தை முறைப்படி பயின்றவர். காஷ்மீர் முதல் காசிவரை யாத்திரைகளை மேற்கொண்டவர். சக்கரங்கள் (யந்திரங்கள்) மூலம் சிவபிரானை வழிபட்டு அபூர்வ சித்திகள் கைவரப் பெற்றவர். தாம் பெற்ற சித்திகளை மக்கள் நலனுக்காகப் பயன்படுத்திய பெரியாருமாவர்.

இவர் வடஇந்தியாவில் பன்னிரண்டு விதமான சைவ வழிபாட்டு முறைகளை உருவாக்கி, மக்களிடையே பரப்பினார். வட இந்தியாவிலுள்ள சிவனடியார்கள் காவி உடுத்து, சடாமுடி தரித்து, உருத்திராக்கம் அணிந்து, நீறு பூசிய மேனியராய்த் திகழ்வதற்கு வழிவகுத்தவர் கோரநாத் சுவாமிகளே ஆவர். எந்நேரமும் சிவவேடதாரியாய்த் திகழும் சிவனடியார் இடைவிடாது ஓங்கார மந்திரம் செபிக்க வேண்டுமென ஏற்பாடு செய்தவரும் இவராவர்.



இந்த நாத் மரபினர் சிவபெருமானை உள்ளும் புறமும் வியாபித்துள்ள பரம்பொருளாக எண்ணி வழிபாடு செய்வர். ஆத்ம நாதராகச் சிவபெருமானையும் அகில நாயகியாக உமையவளையும் பூசிப்பவர்கள். ஆலய வழிபாடு மூலமாகவும் தல யாத்திரைகள் வழியாகவும் பரமானந்த நிலையை எய்தலாம் என்பது இவர்களுடைய கோட்பாடு. அத்துடன் "காயத்திரி" ஓதுவதன் மூலம் தேக ஆரோக்கியத்தையும் குன்றாத இளமையையும் நீண்ட ஆயுளையும் பெறும் முறையை இவர்கள் கடைப்பிடிக்கின்றனர்.

இந்தியாவில் பல இலட்சக்கணக்கான மக்கள் இன்று இம்மதத்தைப் பின்பற்றுகிறார்கள். காதில் குண்டலம் அணிவது இவர்களுடைய மதச் சம்பிரதாயம். வட இந்தியாவிலும் நேர்பாளத்திலுமே இந்நெறியைச் சார்ந்த பலர் உள்ளனர். பதினாறாம் நூற்றாண்டில் உருவான ஹதயோக தீபிகை என்ற நூல் இவர்களின் முக்கிய சாத்திர நூலாக விளங்குகின்றது.

**சிவ அத்வைதம்:**

கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஸ்ரீகாந்தர் என்ற சைவப் பெரியார் இம்மத நெறியைத் தோற்றுவித்தார். அவர் அளித்த பிரம்ம சூத்திரங்

களின் விளக்கங் கொண்ட நூல் இன்றும் பாராட்டுக்குரியதாகத் திகழ்கின்றது. இவருடைய சைவ நெறி பேருண்மையும் (பிரமமும்) பேருலகமும் ஒன்று என்பதாகும். சிவபெருமான் பேருலகமாகச் சித்த சக்தி மூலம் வடிவெடுத்து நிறைபவர் என்பது அவரது நெறியாகும். அதாவது சிவன் சொருப (குணம் குறிகள் கடந்த) நிலையிலிருந்து தடத்த (குணம் குறிகளுடன் கூடிய) நிலைக்கு வருதலாம்.

சிவபெருமான் தனியான ஆன்மிக உருவில் சிவலோகத்தில் இருப்பதாகவும் தவம், தியானம் ஆகியவற்றின் மூலம் படிமுறைகளிலே அவரை அடையலாம் என்பது ஸ்ரீ காந்தரின் தத்துவமாகும். இதனை அடைவதற்கு அமைதி, நம்பிக்கை, பற்றில்லாமை ஆகியவை முக்கிய அம்சங்களாக வேண்டப்படுகின்றன. மனத்துள் இருக்கும் சிவபெருமானை ஆகாய வடிவமாக வழிபடுவதே இவர்களுடைய நெறி. சிவபெருமானின் அருளாலேயே ஆன்மாவைக் கட்டுப்படுத்தும் பற்றுக்களை அறுத்து, முத்தி அடைய வேண்டுமே யன்றி, நற்கருமங்கள் செய்தால் மட்டும் போதாது என்பது இவர்களுடைய நம்பிக்கை.

கி. பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பைய தீட்சிதர் இந்த வழிபாட்டு முறையைச் சார்ந்தவர். இவரின் உரைகள் மக்கள் மனதில் ஒரு தெளிவை ஏற்படுத்தின. அப்பைய தீட்சிதர் ஸ்ரீகாந்தரின் உரைகளுக்கு விளக்கமாக (பாஷ்யமாக) நூற்று நான்கு நூல்கள் எழுதியுள்ளாரென அறியவருகிறது.



ஒட்டு மொத்தமாக இந்தச் சமய நெறிக்கும் குறிப்பான அமைப்போ பின்பற்றுவோரோ இன்று இல்லை. எனினும், வேதாந்த சித்தாந்த முறைகளைச் சமப்படுத்தும் அமைப்பாக இது போற்றப்படுகிறது.

**சுத்தாத்வைத சைவ சித்தாந்தம் :**

சைவ சமயப் பிரிவுகளிலே மக்கள் மனத்தை மிகக் கவர்ந்தது சுத்தாத்வைத சைவசித்தாந்தமாகும். தமிழ் நாட்டிலும் ஈழத்திலும் இதைப் பின்பற்றும் சைவர்கள் பலராவர். யாழ்ப்பாணத்தில் சைவம் என்றால் அது சைவ சித்தாந்தம் என்றே பலர் கருதுகின்றனர். சைவ ஆகம முறைகளைப் பரப்பும் ஓர் அமைப்பாகவே இது திகழ்கின்றது.

சைவ சித்தாந்தக் கருத்துக்களை வெளியிடும் முதலாவது தமிழ் நூல் தமிழ் மூவாயிரம் என வழங்கும் திருமந்திரம். இதனை நந்திநாதர் பரம்பரையைச் சேர்ந்த சுந்தரநாதர் என்பவர் திருமூலர் என்ற பெயரைத் தாங்கி ஆக்கியுள்ளார். இச்சிவயோகியார் திருநந்திதேவரின் திருவருளைப் பெற்ற சிவயோகியருள் ஒருவர் என்பது வரலாறு. வடமொழியிலுள்ள சிவாகமங்களின் கருத்துக்கள் திருமந்திரத்திற் கூறப்படுவதால் அதனைத் தமிழ் ஆகமம் என்பர்.

திருமூலரைத் தொடர்ந்து தமிழகத்தில் தோன்றிய சமய குரவர்கள் அருளிய தேவாரமும் திருவாசகமும் சைவசித்தாந்தத்தின் முக்கிய தோத்திர நூல்களாகப் போற்றப்படுகின்றன. இவை பன்னிரு

திருமுறைகளிலுள்ள முதல் எட்டுத் திருமுறைகளுமாம். நாயன்மார்களின் பின்வந்த சந்தான குரவர் நால்வரும் சைவ சித்தாந்தத்தின் **சாத்திர நூல்களை** ஆக்கியுள்ளனர். சந்தான குரவருள் முதலாவது குரவர் மெய்கண்டதேவர். அவர் அருளிய நூல் **சிவஞான போதம்**. இது சைவ சித்தாந்தக் கருத்துக்களை மிகச் சுருங்கிய அளவிலே பன்னிரண்டு **சூத்திரங்களில் தொகுத்துக்** கூறுகின்றது.

மெய்கண்டாரின் சீட பரம்பரையில் மறைஞான சம்பந்தர் நூல் ஒன்றும் செய்யாது மௌன நெறி நின்று இறைவனை அடைந்தவர். இன்னொருவர் மெய்கண்டாரது தந்தையாரான அச்சுதகளப்பாளரின் குலகுருவான அருணந்தி சிவாசாரியர். இவர் ஒருமுறை மெய்கண்டாரிடம் அவரின் பக்குவ நிலை அறியாது ஆணவத்தின் வடிவம் கேட்டார். அதன் உண்மையை எடுத்துக்காட்டு மூலம் மெய்கண்டார் உணர்த்தினார்; அன்று முதல் மெய்கண்டாரைத் தமது குருவாக ஏற்றுக்கொண்டார். அருணந்தி சிவாசாரியர் இரு நூல்களும், நான்காமவரான உமாபதி சிவாசாரியர் எட்டு நூல்களும் செய்துள்ளனர். சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் முடிமணியாய் விளங்குவது சிவஞானபோதம். இதனை ஆக்கியவர் மெய்கண்டதேவர். இதனால் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் **மெய்கண்ட சாத்திரங்கள்** என்பர்.

சித்தாந்த சாத்திரங்களின்படி பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் நித்தியமானவை. மும்மலங்களினாற் பிடிக்கப்பட்ட ஆன்மா அவற்றிலிருந்து விடு



பட்டுச் சீவன்முத்தர் நிலையடைந்த போதிலும், தனித்துவமாக நிற்குமேயன்றிச் சிவனின் தொழில்கள் எதையும் செய்யமாட்டாது. இக்கருத்து மக்கள் மனதில் ஊன்றிப் பதிந்துவிட்டது. மெய்கண்டாருக்கு முன்னர் வேத, உபநிடதங்களின் கூற்றுக்களில் இருந்த ஒருமைத்தத்துவம்-அத்துவித தத்துவம்-அவருக்குப் பின் இருமை நிலைகளாகக் கருதுவர். இதன் விளைவாகவே **வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்** என்ற நிலை ஏற்படலானது.

சைவ சித்தாந்தம் ஆலய வழிபாட்டையும் சிவாசாரியர்களின் பூசை முறைகளையும் ஆதீனங்கள் மூலம் சமய தத்துவங்களைப் பரப்பும் குரு, சீட பரம்பரை முறைகளையும் தமிழ் நாட்டில் நிலைபெறச் செய்துள்ளது.

**வீரசைவம் :**

காண்டற்கரிய கடவுளைச் சிவன் எனக் கண்டு தெளிவதற்கு நல்லார் இணக்கமும் இறை பூசை, நேசமும் வேண்டும். இந்த வகையிலே மன ஒருமையுடன் சிவனை வணங்குதல் உண்மைச் சைவ சமயியின் அடையாளமாகும். முப்புரம் எரித்த விரிசடைக் கடவுளை **வீரசிவம்** எனப் புகழ்ந்துரைப்பர். சிவனைச் ''செம்பொருள் துணிபு'' எனச் சிறப்பித்து வணங்கும் மரபு ஒன்றுண்டு. குன்றாத பக்தியும் குலையாத உறுதியும் கொள்கையாய்க் கொண்ட சைவ சமயத்தில் ''வீர'' என்னும் அடைமொழியைச் சேர்த்து **வீரசைவம்** என்ற சமயம் உதயமானது.

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருந்தன் மையனான சிவனை வியந்திடும் வீரசைவம் பழமையானது. பின்னாளில் வைஷ்ணவமும் சமணமும் பாரதத்தில் மேலாதிக்கம் செலுத்தியதால் சைவத்தின் சிறப்பு மறைக்கப்பட்டிருந்தது. அவ்வேளையில் சைவத்துக்கு மாறாய் நடந்தவர்களுக்கும் பழைய மூட நம்பிக்கைகளில் மூழ்கிக் கிடந்தவர்களுக்கும் மாறாகக் கன்னட நாட்டில் தோன்றிய வசவதேவர் பண்டு தொட்டுப் பழகி வந்த வர்ணாச்சிரம தர்மங்களைத் துணிவுடன் எதிர்த்தார். அவரின் தளராமுயற்சியாலும் அவ்வியக்கம் வீரசைவம் என்னும் பெயர் பெற்றது எனப் பேராசிரியர் சாக்ஹேர் கூறுவர்.

புத்தூக்கமும் புதிய பிரசாரமும் மக்கள் மனத்தில் புத்துணர்ச்சியைத் தூண்டியதால் வசவதேவரின் புதிய பாதையில் பலர் தொடரலாயினர். வசவரின் செயல்திறனும் அரசவையில் அவருக்கு இருந்த செல்வாக்கும் அவரது துணிவும் அவரின் நற்கருமங்களை மேல் நிலையடையச் செய்தன. வசவரின் செல்வாக்கு மேலோங்குவதைக் கண்டு பொறாமை கொண்ட சிலர் அவருக்கு எதிராக அரசனுக்குக் கோள் சொல்லிய போதிலும், தெய்வ அனுக்கிரகம் வசவர் பக்கம் இருந்ததால், வசவேசர் வீரத்துடன் மேற்கொண்ட வீரசைவப் பணி கன்னட நாடு முழுவதும் பரவியது. ஆயினும் வீரசைவம் வளர்ந்துள்ள அந்நாட்டில் மூல ஆசாரியர்களான பஞ்சாச்சாரியர் மரபு, வசவ மரபு என



இருவகை மரபுகள் இன்றும் கன்னட மாநிலத்தில் நிலவி வருகின்றன எனப் பேராசிரியர் கலாநிதி வை. இரத்தினசபாபதி அவர்கள் தமது வீரசைவம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

சிவன் பெருந்தன்மை செப்புதற் கரியது. அவர் ஊரிலான்: பேரிலான்; குணம் குறியிலான்; பார்க்கும் இடம் எங்கும் நீக்குமற நிறைகின்ற பரிபூரணானந்தம் என்று போற்றுவர் சிவதொண்டர். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் சிவனின் அருள் தன்மையை வியந்திடும் வீரசைவம் மிகத் தொன்மை வாய்ந்தது. செம்பொருள் துணிவெனச் செப்பிடும் சிவனின் குறியாக அப்பெருமானின் அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கப் பெருமானை நினையுந் தொறும், காண் தொறும், எப்போதும் அனைத்து எலும்பும் உள்நெகத் தொழும் தொண்டர் வீரசைவர். அதனாற் போலும் சிவலிங்கப் பெருமானைப் பிரிந்திருக்க மனமில்லாத வீரசைவர் அப்பெருமானைத் தமது அங்கத்தில் கட்டிக்கொள்ளும் வழக்கம் ஏற்படலாயிற்று.

**வீரசைவ மூல ஆசாரியர்கள்**

ஆதியில் வீரசைவத்தைத் தோற்றுவித்த ஆசாரியர்கள் ஐவர். அவர்களைப் பஞ்சாசாரியர்கள் என்பர். இப்பஞ்சாசாரியர்கள் பற்றி மரபு வழிப்பட்ட வரலாறு ஒன்றுண்டு. இரேணுகாசாரியர், மருளாராத்திரியர், ஏகோராமராத்திரியர், பண்டிதராத்திரியர், விஸ்வாராத்திரியர் ஆகிய ஐந்து மூல ஆசாரியர்களும் பரமசிவத்தின் ஐந்து முகங்களிலிருந்துதோன்றி, வீரசைவத்தை வளர்த்துப் பல்வேறு

இடங்களில் வீரசைவ மடங்களை நிறுவியுள்ளனர் என்பது மரபு வழிச் செய்தி.

i இரேணுகாசாரியர் என்பவர் இரேவணாத்திரியர், இரேவணாசித்தர் என்றும் சொல்லுவர். இவர் கன்னட மாநிலத்தில் கொல்லிப்பாகை என்னுமிடத்திலுள்ள சோமேசுவர இலிங்கத்தின் சத்தியோசாத முகத்திலிருந்து வெளிப்பட்டு, இந்தியாவின் பல பாகங்களிலும் ஈழத்திலும் வீரசைவத்தை உபதேசம் செய்தார்.

இராவணனின் தம்பியாகிய விபீடணன் இவரிடம் வீரசைவ உபதேசம் பெற்று மூன்று கோடி இலிங்கங்களை ஈழத்தில் அமைத்தான் என்பது பழைய செய்தியாகும்.

இரேணுகர் வழியில் பிருங்கி மரபு தோன்றியது. இவர் தோற்றிய மடம் ஏம்பாபுரியில் உள்ளது.

ii மருளாராத்திரியர் என்பவர் மருளர் என்றும் தாருகர் என்றும் அழைக்கப்பெற்றார். இவர் இந்தியாவின் மத்தியப் பிரதேசத்தில் சித்தலிங்கத்தில் இருந்து வெளிவந்தவர். இவரது வழியில் வீரமரபு தோன்றியது. இவர் தோற்றிய மடம் ஒன்று உஜ்ஜயினியில் உள்ளது; மற்றொன்று பெங்களூரில் உள்ளது.

iii ஏகோராமராத்திரியர் என்பவர் சங்குகன்னர் என அழைக்கப்பெறுவர். இவர் ஆந்திரப் பிரதேசத்தில் மல்லிகார்ச்சுன இலிங்கத்தில் இருந்து தோற்றியவர். இவரது மரபினர் திருப் பருப்பத மலை அதாவது ஸ்ரீ சைலம் என்னும் இடத்திலுள்ள மடத்திலிருந்துவெளி வந்தவராவர். இவரைக் கந்த மரபினர் என்பர்.



iv பண்டிதராத்திரியர் என்பவர் வட இந்தியாவிலே கேதாரநாத்தில் இராமநாத இலிங்கத்தில் இருந்து வெளிவந்தவர். இவர் வழியில் நந்தி மரபு தோன்றியது. இவர் தோற்றிய மடம் கேதாரநாத்தில் உள்ளது

v. விஸ்வாராத்திரியர் என்பவர் உத்தரப் பிரதேசத்திலே காசிப் பகுதியில் அதாவது வாரணாசியில் விசுவேசுவர இலிங்கத்தில் இருந்து தோன்றியவர். இவர் நிறுவிய மடம் வாரணாசியில் உள்ளது. இவரை விசுவர் என்றும் சொல்லுவர். இவர் வழிவந்தவர் ஷிந்தி மரபினர் என அழைக்கப்பெற்றனர்.

பஞ்சாசாரியர்களால் காலம் தோறும் (யுகம் தோறும்) தோற்றி வளர்க்கப்பெற்ற வீரசைவம் காலங்கடந்த தொன்மையானது. வீரசைவம் என்பது பீடும் பெருமையும் துணிவும் தனித்துவமும் கொண்ட ஒரு சமயம் என முன்னர் கண்டோம். மேலும், வீரம் என்னும் ஆகமத்திற் கூறியுள்ள சைவ நெறியே வீரசைவம் என இதனை விளக்கலாம். அத்துடன் சைவ சமயத்திலுள்ள இருபத்தெட்டுச் சிவாகமங்களில் இறுதிப் பகுதிகள் வீரசைவக் கொள்கைகளையும் சடங்குகளையும் கூறுவதால், வீரசைவம் என்பது ஆகமாந்தத்தின் ஓர் அமிசம் எனலாம். இது சைவ சமயத்தின் உயர் நிலையாக இருந்த போதிலும், தனி இயல்புடைய ஒரு சமயக் கொள்கையைத் தன்னகத்தே கொண்டுள்ளது. பஞ்சாசாரியர்களால் தாபிக்கப் பெற்ற இந்த வீரசைவம் யுகந்தோறும் இருந்து வருவதால் சனாதனத்துவம் உடையதும் வேத நெறியைத் தழுவி இருப்பதனால் சிறந்த பாதுகாப்புடையதுமாய் விளங்குகின்றது.

கி. பி. 12ஆம் நூற்றாண்டில் சமணமும் வைஷ்ணவமும் உயர்வடைந்து, சைவம் வீழ்ச்சியடைந்திருந்தது. அக்காலத்தில் கன்னட மாநிலத்தில் தோன்றிய வசவதேவர் சைவக் கருத்துக்களைக் குறுகிய காலத்தில் புரட்சியுடையன வாக்கினார்; வருணாச்சிரம முறைகளில் உள்ள குறைகளை நீக்கினார்; அவருடைய முயற்சி மிகவும் வீரம் வாய்ந்தது; நற்பயனும் விளைந்தது. கருனாடக அரசனின் முதலமைச்சரான வசவரின் வீரம் நிறைந்த சைவக் கொள்கை காலத்துக்கு ஏற்றதென அம்மாநிலத்தில் இருந்தவர்களை மனம் கவரச் செய்தது. அங்கலிங்கியான வசவேசரின் வீரக் கொள்கையில் உளம் படிந்த மக்கள் அவரைப் போலவே தாமும் வீரசைவர்கள் ஆயினர். அதன் பேறாக வீரசைவம் புத்துயிர் பெற்று, மற்றைய மாநிலங்களுக்கும் பரவத் தொடங்கியது.

சிவபெருமானை மாத்திரம் முழுமுதல் தெய்வமாகக் கொண்ட சைவசமயத்தில் சிவபெருமானைச் சிவலிங்க உருவத்தில் பரதெய்வமென வழிபடுவது சைவத்துக்கும் வீரசைவத்துக்கும் பொதுவான கொள்கையாகும். ஆயினும், சைவமும் வீரசைவமும் வழிபடக் கையாளும் முறைகள் வேறுபடுவன. சைவர்கள் இலிங்கத்தைக் கோயிலிலும் பேடகத்திலும் வைத்து வழிபடுவர்; வீரசைவர் அதனைக் கைத்தலத்தில் வைத்து வழிபடுவர். சைவ சமயம் தத்துவங்கள் முப்பத்தாறையும் உலக உற்பத்தித் துறையில் விளக்குகிறது; வீரசைவம் அவற்றை உளவியல் முறையில் காட்டுகிறது.



பிரபஞ்சத்திற் காணப்படும் நிகழ்ச்சிகளுக்குச் சிவசக்தி எந்த அளவு காரணமோ அந்த அளவு ஆன்மாக்களின் செயல்கள் காரணமெனச் சைவ சமயத்தினர் குறிப்பிடுவர். சிவன் காரணமாக இருப்பதற்கும் ஆன்மாக்களின் செயல்களுக்கும் தொடர்பில்லை என்று சைவ சித்தாந்தப் பிரிவினர் கூறுவர். வீரசைவம் அல்லது இலிங்காயத பிரிவினர் சிவசக்தியே பிரபஞ்சத்தையும் ஆன்மகோடிகளையும் அருட்சக்தியாக நின்று ஆட்டுவிக்கின்றது என வலியுறுத்துகின்றனர். அதனால் வீரசைவத்தைச் சக்தி விசிட்டாத்வைதம் எனக் கூறுவதும் உண்டு.

சைவ சமயக் கொள்கையையும் வீரசைவக் கொள்கையையும் வேறுபடுத்துவதற்காகவே ''வீர'' என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டிருக்கிறது. 'வீர' என்ற சொல், வி + ர எனப் பிரித்து, வி—வித்தை எனவும் ர — ரமித்தல் அதாவது திளைத்தல் எனவும் பொருள் தருவதால், இவ்வடைமொழி சிவ சீவ ஐக்கிய வித்தையில் திளைக்கின்ற சைவம், வீர சைவம் என்ற பொருளை உணர்த்தும்.

கடவுள் நிலை அமிசத்தையும் அசைவு அமிசத்தையும் இணைப்பதைச் சக்தி எனக் கொள்ளும் விசிட்டாத்வைதமே வீரசைவத்தின் உட்பொருள். இதனை,

> **தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தரும்சக்தி**
> **பின்னமிலான் எங்கள் பிரான்.**

எனத் திருவருட்பயன் கூறும்.

உடம்பில் இலிங்கத்தை அணிந்து கொண்டு ஒன்றான கடவுளை வழிபடுமாறு கூறுவதே வீரசைவத்தின் வெளிப்பொருள். வீரசைவம் ஆடம்பரச் சடங்குகளைச் சிறப்பாகக் கொள்வதில்லை. அதன் முக்கிய சடங்குகளெல்லாம் பிறக்கும் போது ஒவ்வொரு குழந்தைக்கும் குரு செய்யும் இலிங்க தீட்சை ஒன்றில் அடங்கும். இத்தீட்சை கற்பலிங்க தாரணத்தின் ஓர் அம்சமாகக் கொள்ளப்படுகிறது. ஒருவர் அங்க இலிங்கியானதன் பின்னரே வீரசைவர் ஆகலாம் என்பது மரபு.

சிவனைத் தவிர வேறு தெய்வத்தை வழிபட மறுக்கும் பக்தியே வீரசைவத்தின் தலையாய கோட்பாடெனக் கூறுவர். கி. பி. 200 - 500 வரையிலுமுள்ள பல்லவர் காலம் முழுவதும் நாயன்மார்களின் சிவபக்தி மேலோங்கி இருந்தது. அதனைத் தொடர்ந்து பின்வந்த நாயன்மார்களும் சிவபக்தியைப் பெருகச் செய்தனர். இத்தகைய பக்தியை வேதச் சடங்குகளிலும் சிறந்ததாக அக்கால மக்கள் கருதினர். அவர்களைப் புராதனர் என வசவேசர் கூறிப் போற்றுகின்றார்.

வசவண்ணா போதித்த வீரசைவத்தை இலிங்காயத சமயம் என்று சாதாரணமாகக் கூறுவதுண்டு. இலிங்கத்தை எப்போதும் உடம்பில் அணிந்திருப்பதால் உடம்பிலுள்ள எல்லா மாசுகளும் எரிக்கப்பட்டுவிடும் என்பது இச்சமய நம்பிக்கை. இந்நம்பிக்கையின் விளைவாக இவர்கள் பிறவேற்றுமைகளைப் பாராட்டுவதில்லை. அத்துடன் பிறப்பு, இறப்பு, பிறரைத் தீண்டுதல், சேடம் உண்ணல்,



பெண்களின் மாதவிலக்கு ஆகிய சூதகவகைத் தீட்டுக்களும் இவர்களுக்கு இல்லையெனக் கலாநிதி வை. இரத்தினசபாபதி அவர்கள் தமது ''வீரசைவம்'' என்ற நூலிற் குறிப்பிட்டுள்ளார்.

**மூவகைத் துறைகள் :**

வீரசைவத்தின் முடிமணியாய் விளங்கும் நெறிமுறைகள் மூன்று. அவை ஐவகை ஒழுக்கம் என்னும் பஞ்சாசாரம்; எண்வகைக் காப்பு என்னும் அட்டாவரணம்; அறுவகை இணைப்பு என்னும் சடுத்தலம். வீரசைவத்தின் வளர்ச்சியை நோக்குமிடத்து, சமுகத்தை மையமாக வைத்து அன்பு, அறம், அறிவு ஆகியவற்றைத் துணையாகக் கொண்டு அதன் மேம்பாட்டுக்கான பண்பையும் பணிகளையும் முன்னெடுத்துச் செல்லுதல் வேண்டற்பாலது.

**1. பஞ்சாசாரம் :**

இலிங்காயதர் அனைவரும் ஒரே குடும்பத்தினர் போல் நடப்பதற்கான நெறிகளைக் காட்டும் ஐந்து நெறிகள் பஞ்சாசாரம் எனப்படும். அவை இலிங்காசாரம், சதாசாரம், சிவாசாரம், பிருத்தியாசாரம், கணாசாரம் என்பனவாம்.

i இலிங்காசாரம என்பது குருவானவர் அநுக்கிரகித்துக் கொடுத்துள்ள இலிங்கத்தை அணிந்து கொண்டு நாள்தோறும் ஒரு காலமோ, இரு காலமோ அல்லது மூன்று காலமோ அதைப் பக்தி பூர்வமாகத் தொழுதல்;

ii சதாசாரம் என்பது வாழ்க்கைக்குத் தேவையான ஏதேனும் ஒரு தொழிலை அறவழியிற் செய்து

கொண்டு நன்னெறியில் நிற்றல். அத்துடன் ஏழைகளை ஆதரித்து, எப்பிராணிகளையும் துன்பப்படுத்தாது வாழ்தல்;

iii சிவாசாரம் என்பது சிவனடியார்களான இலிங் காயதர்களுக்குள் வேறுபாடின்றி வீரசைவர் எல்லோரும் சிவசொரூபிகள் என்றுணர்ந்து, வீரசைவ சீலங்கள் நிறைந்தவராய் வாழ்தல்;

iv பிருத்தியாசாரம் என்பது கடவுளிடத்திலும் அடியார் களிடத்திலும் பணிவுடையராய் இருந்து, உலகத்தார்க்கு உதவி வாழ்தல்;

v கணாசாரம் என்பது நியாய நிருபணத் தத்துவ மாகும். அதாவது தனி அறத்தையும் பொது அறத்தையும் வீரசைவ நெறிபிறழாமல் ஒற் றுமையாகப் பேணிப் பாதுகாத்தல்.

## 2. அஷ்டாவரர்ணம்:

அஃதாவது ஆன்மாவை அவித்தை (மாயை) யின் தாக்குதலின் நின்றும் காத்து, மோட்சத்துக்கு நடத்திச் செல்லும் எட்டுக் கோட்டைகளாம். அவை குரு, இலிங்கம், சங்கமம், பாதோதகம், பிரசாதம், விபூதி, உருத்திராக்கம், மந்திரம் என்பன வாம். இவற்றை எண்வகைக் கர்ப்பு அல்லது கோட்டை எனக் கூறுவர். இவற்றுள்,

i குரு என்பது கு + ரு எனப் பிரித்து, கு = பாசம், ரு = நீக்குதல்; அஃதாவது இறைவடிவான குரு பாசத்தை நீக்குபவர் எனப் பொருள்படும். மேலும் இதனை விளக்குமிடத்து, சீடனைப்



பிடித்துள்ள மும்மலங்களை நயன தீட்சையின் போது குருவானவர் தனது அருட் பார்வை யினால் நீக்குவர் என்பது தெளிவாகும்.

குருவாய் உள்ளவர் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் இன்றி உயிர்களி டத்து இரக்கம் உள்ளவராய் இருத்தல் வேண்டும். பொருள் பற்றிச் செய்கின்ற பூசனையில் மனம் கொண்டு, வைதிகக் கிரியைக்காக ஆசாரி யராவோர் ஆன்மாக்களை நல்வழிப்படுத்த இயலாது. அத்தகையோர் குருடனுக்குக் குருடன் வழிகாட்டும் குருட்டாட்டக்காரருக்கு ஒப்பாவர்.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.

எனத் திருமந்திரம் செப்பும். அஞ்ஞானத்தை நீக்கவல்ல குருவினைக் கொள்ளாதோர் மெய்ப் பொருளை அறியும் முயற்சியில் விளையாடு தல் கருக்குழியில் வீழ்தற்கு ஏதுவாகும். எனவே தக்காரிடம் சென்று உண்மைப்பொருள் அறிந்து நன்னெறி கடைப்பிடித்தல் வேண்டும்.

உண்மை நெறியில் ஈடுபட்டுழைக்கும் குரு விடமே ஒப்பற்ற பண்புகள் குடி கொண்டி ருக்கும்.

பலன்கள் வேண்டிய பரிசெலாம் படைத்திடும்
பரம தத்துவ ஞானி
நலங்கொள் நாமமாம் மந்திரம் செபித்திடின்
நயந் தவர் நீராடும்

சலங்கொள் தீர்த்தமாம் சரீரமே அவனுரு
சரதம் மற்றவர் செவ்வாய்
மலர்ந்த வாசகம் மயற்பிணி யகற்றிடும்
வன்மை சேர் மருந்தாகும்.

என்று ஞானவாசிட்டம் நவில்கின்றது.

ii **இலிங்கம்** என்ற வடமொழிச் சொல் சிவபெருமானுடைய சதாசிவத் திருமேனியின் அடையாளத்தைக் குறிக்கும். வடமொழியில் லிங்கம் என்பது லி + கம் எனப் பிரித்து, ''லி'' என்பது லயதே என்ற வினைப் பகுதியாகவும் லயப்பட்டு (ஒடுங்கி)ப் போதல் என்பதாகவும் பொருள் தந்து, ''கம்'' என்ற வினை மூலத்தை விகுதியாகக் கொண்ட வினையடிப் பிறந்த பெயர் ஆகும். இந்த வகையில் லி = ஒடுங்குதல், கம் = தோன்றுதல் எனப் பொருள் படும். அஃதாவது ஆன்மாக்களும் உலகங்களும் ஒடுங்குதற்கும் தோன்றுதற்கும் காரணமான உண்மைப் பொருளை உணர்த்தும் வடிவமாகும். இது ஆன்மாவைப் பிணித்துள்ள மல பந்தங்களை ஒடுக்கி, நலன்களைத் தோற்றுவிக்கும் எனப் பொருள்தரும்.

மேலும், * சங்கார காலத்தில் எல்லாப் பூதங்களும் எங்ஙனம் ஒடுங்குகின்றனவோ அங்ஙனமே சிருட்டி காலத்தில் யாவும் தோற்றம் பெறுகின்றன எனச் சுப்ரபேதம் என்ற வடமொழித் திருப்பள்ளியெழுச்சி செப்புவதும் சிவலிங்கம் என்பதன் பொருளை உணர்த்துகின்றது.

* லயங் கச்சந்தி பூதானி ஸங்ஹாரே நிகிலம் யத: /
ஸ்ருஷ்டி காலேததா ஸ்ருஷ்டிஸ் தஸ்மால் லிங்க
முதாஹ்ருதம் ||
— சுப்ரபேதம்.



iii **சங்கமம்** என்பது சிவனடியார் கூட்டத்தைக் குறிக்கும். உலக விசாரத்தை விட்டவர் சங்கமர் எனப்படுவர். இவர்கள் சிவ சீவ ஐக்கியத்தை அறிவிக்கும் ஞான மூர்த்திகளாவர். ''தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே'' எனப் புறப்பாடல் புகழ்ந்துரைக்கும்;

iv **பாதோதகம்** என்பது குரு, இலிங்க, சங்கமர்களின் திருவடிகளை நீராட்டிய நீரே (தீர்த்தமே) அதாவது பாத தீர்த்தமே பாதோதகம் எனப்படும். வீரசைவக் கோட்பாட்டின்படி வீரசைவர் பாதோதகத்தை மிகக் கவனமாக அருந்திப் பேணிப் பயன் கொள்வதன் மூலம் ஆன்ம சாந்தி பெறுவர்;

v **பிரசாதம்** என்பது குரு, இலிங்க, சங்கமர்களுக்கு அர்ப்பணம் செய்யப் பெற்றவை எல்லாம் பிரசாதமாகும். வீரசைவர் ஒவ்வொருவரும் தாம் உபயோகிக்கும் எப்பொருளையும் குரு, இலிங்க சங்கமர்களுக்கு அர்ப்பணம் செய்த பின்னரே உபயோகிக்க வேண்டும்;

vi **விபூதி** என்பது சுத்தமான பசுவின் சாணத்தை நீறாக்கி. மந்திர பூர்வமாக எடுக்கப்பெற்ற வெண்மையான திருநீறே விபூதியாகும். திருநீறு தீராத நோய்களைத் தீர்த்து, காண்பதற்கு அழகையும் அணிபவர்க்குப் பெருமையையும் சேர்க்கும் எனச் சம்பந்தப்பெருமானும் நாவுக்கரசரும் கூறிப்போந்தனர்;

vii **உருத்திராக்கம்** இதனை அக்கமணி என்றும் சொல்வர். உலக உயிர்கள் படும் துயர் கண்டு இறைவன் உகுந்த கண்ணீரே உருத்

திராக்கம் அல்லது அக்கமணி ஆயிற்று. இவ்வுருத்திராக்கத்தைச் சிவமணி என்றும் கூறுவர். சிவனடியார் இம்மணியைக் கோத்துத் தமது கழுத்திலும், தலையிலும் மாலையாக அணிவர். நீராடும்போது கழுத்தில் அணிந்த உருத்திராக்க மாலையிற் படிந்த நீர் உடம்பிற் செறிவதால், உடம்பிலுள்ள நோய் நீங்கும் என்பது சமய நம்பிக்கை;

viii மந்திரம் என்பது மனதுக்கு உறுதியைத் தருவது எனப் பொருள்படும். பிரணவத்துடன் கூடிய பஞ்சாட்சரத்தை உச்சரிப்பதால் மாறாத நோய்களை மாற்றி, மனத்துக்கு உறுதியும் தியானத்துக்கு உதவியும் நல்கிச் சிவ பக்தியை வளர்க்கிறது. மந்திரம் மனனம் செய்பவரைக் காப்பாற்றுகிறது என்ற பொருளும் தரும்.

மேலே குறிப்பிட்டுள்ள எண்வகைக் காப்பினுள் குரு, இலிங்கம், சங்கமம் ஆகிய மூன்றும் வழிபாட்டுக்குரியவை; விபூதி, உருத்திராக்கம், மந்திரம் ஆகிய மூன்றும் வழிபாட்டுக்குப் பயன்படுபவை; பாதோதகம், பிரசாதம் இரண்டும் வழிபாட்டின் பயன்கள் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

### 3. சடுத்தலம்:

சீவான்மா சிவபரம் பொருளுடன் இணைதல் சடுத்தலம் எனப்படும். இதனை வீரசைவநெறி எனப் பொதுவாகக் கூறுவதும் உண்டு. வீரசைவர்களுடைய தலை சிறந்த குறிக்கோள் இலிங்காங்க



சம்பன்னராய்ச் சிவைக்கியமாதல் ஆகும். அதனை அடையும் முறையே சடுத்தலம் என்று கூறுவர். இந்நெறியில் சாதகர்கள் ஆறு மனோ தத்துவ நிலைகளைப் படிமுறையிலே ஒன்றன் பின் ஒன்றாகக் கடந்து சென்றால், மோட்ச நிலை எய்துவர் என்பது கோட்பாடு. வீரசைவர் தமது வாழ்வில் ஐவகை ஒழுக்கங்களால் வெற்றியீட்டி, எண்வகைக் காப்புக்களால் தூய்மை பெற்று, இறைவனோடு இணைவதற்கு உதவுவதே சடுத்தல நெறியாகும்.

சடுத்தல நெறியில் பக்தித் தலம், மகேசத் தலம், பிரசாதித் தலம், பிராணலிங்கத் தலம், சரணத் தலம், ஐக்கியத் தலம் என ஆறு வகையான இணைப்புக்கள் உண்டு. ஈண்டு தலம் என்பது ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட வளர்ச்சி முறை நிலையைக் காட்டப் பயன்படுத்தப்படும் சொல் எனலாம்.

i பக்தித் தலம் என்பது உணர்ச்சி நிரம்பிய மெய்யுணர்வு பெறுதல்;

ii மகேசத் தலம் என்பது சீவான்மா இறைவனுடன் இணைவதற்கு முயற்சி செய்தல்;

iii பிரசாதித் தலம் என்பது இறைவனுடன் இணைவதற்குத் தன்னை ஈயும் அறிவு தொழிற்படுதல்;

iv பிராணலிங்கத் தலம் என்பது சீவான்மாவின் இயற்கை உணர்வு விஞ்சி அகத்திற் களித்தல்;

v சரணத் தலம் என்பது சீவான்மாவின் செயல் இணையும் நிலையாதல்;

vi ஐக்கியத் தலம் என்பது சீவான்மா பரமான்மாவுடன் ஒன்றுபட ஒருப்படுதல்.

இந்த வகையில் பக்தித் தலத்திலும் மகேசத் தலத்திலும் நிற்பவர் சிவபக்தர்; பிரசாதித் தலத்திலும் பிராணலிங்கத் தலத்திலும் நிற்பவர் பஞ்சப் புலன்களை அடக்கிய சங்கமர் (சிவனடியார்); சரணத் தலத்திலும் ஐக்கியத் தலத்திலும் நிற்பவர் குரு என்னும் நல்லாசான்களாவர்.

வைதிகக் கோட்பாடுகளுக்கு முற்றிலும் உட்படாது தனித்துவமாய் இயங்கிய வீரசைவம் இந்தியா முழுவதும் பரவியுள்ளது. தமிழ் நாட்டில் இராமேசுவரம், கும்பகோணம், மதுரை, காஞ்சி, திருப்பரங்குன்றம், சென்னை, சேலம், திருச்சி, தஞ்சை, கோவை, புதுவை முதலிய இடங்களில் வீரசைவ மடங்கள் உள்ளன. கும்பகோணத்திலுள்ள மடம் பெரிய மடம் என்று வழங்கப்படுகிறது. அம்மடம் கும்பகோணம் (குடந்தை) மாமாங்கக் குளத்துக்கு அண்மையில் உள்ளது. அங்குள்ள வீரசைவ அடியார்களை வீரமாஹேஸ்வரர் என்பர். அந்த மடமும் அதைச் சேர்ந்த வீரபத்திர சுவாமி கோயிலும் சோழ மன்னர்களாற் கட்டப் பெற்றவை.

வீரசைவ சிவாசாரியர்கள் புராணப் பிரசித்தமான காசி முதலிய சேத்திரங்களிலுள்ள சோதி லிங்கங்களை ஆதரித்து, அங்கிருந்த அரசர்களாற் பூசிக்கப் பெற்றுத் தாபித்த குரு பீடங்கள் வடநாடு உள்ளிட்ட பல இடங்களிலும் இன்று வரை காணப்படுவதே அவற்றின் தனித்துவத்துக்கும் சிறப்புக்கும் சான்றாகும்.



**ஈழத்தில் வீரசைவம்:**

பாரத நாட்டின் எல்லா மாநிலங்களிலும் பரவிய வீரசைவம் ஈழத்திலும் விபீடணன் காலத்திலிருந்து நிலைபெற்று வந்துள்ளது. மேலும் குளக்கோட்டு மகாராசாவினால் திருக்கோணேச்சரம், திருக்கோயில் (மட்டக்களப்பு) போன்ற இடங்களுக்கு இந்தியாவிலிருந்து வீரசைவ சிவாசாரியர்கள் அர்ச்சகர்களாக அழைத்து வரப்பட்டனர் எனக் கர்ண பரம்பரைக் கதையொன்று உளது.

ஈழத்தைப் பொறுத்தவரையில் குறிப்பிட்ட ஒரு சமூகத்தினரே வீரசைவத்தைப் பின்பற்றி வருகின்றனர். குறிப்பிட்ட ஒரு பகுதியினரே இதனைப் பின்பற்றுவதால் அப்பகுதியினரின் வளர்ச்சிக்கு ஏற்பவே வீரசைவமும் இங்கு வளர்ச்சி பெறுகின்றது. இச்சமய நெறிமுறை ஒரு சமூகத்தினருக்கு மட்டும் உரியதொன்றல்ல என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும்.

அந்த வகையில் திருகோணமலையிலும் மட்டக்களப்பிலும் வாழும் வீரசைவர் ஆதிக் குடிகள் என்று கொள்ளமுடிகிறது. அவர்கள் ஆசார சீலர்களாய் வாழ்ந்ததனால் திருக்கோணேச்சரத்திலுள்ள மலைக் கோயிலுக்கு வீரசைவர் பரம்பரை அர்ச்சகர்களாக இருக்கும் வாய்ப்பினைப் பெற்றிருந்தனர்.

திருக்கோணேசர் ஆலயம் உரியமுறையிற் பூசிக்கப்படாத காலத்தில் சிவத்திரு ஐயாமுத்துக் குருக்கள், அவரது மகன் வைத்தீஸ்வரக் குருக்கள் ஆகிய வீரசைவக் குருமார் மலைக்கோயிலில் இருந்த

சிவலிங்கப் பெருமானுக்கு வெள்ளிக் கிழமைகள் தோறும் தவறாது பக்தி பூர்வமாகப் பூசை செய்து வந்தனர். அவர்களுக்கு அநுசரணையாகச் சிவத்திரு ஏரம்புக் குருக்கள், அவரின் மகன் விசுவலிங்கக் குருக்கள், சிவத்திரு சபாபதிக் குருக்கள், சிவத்திரு சிவஞான தேசிகர் ஆகியோரும் குருத்துவப் பணியாற்றி வீரசைவ மரபினைப் பேணினர். இன்றும் அவர்களின் மரபினர் வீரசைவத்துக்கும் தமிழ் மொழிக்கும் தம்மாலான பங்களிப்பைச் செய்து வருகின்றனர்.

பொதுவாக நோக்குமிடத்துப் பழங்குடிகளான வீரசைவர் தொழில் காரணமாக ஓரிடத்தில் தரித்திருக்காது வேறூர்களுக்குச் சென்று வாழ வேண்டியவர்களாகின்றனர். மட்டக்களப்பில் வீரசைவர் செறிந்து வாழும் பகுதியைக் குருக்கள் குடி எனக் கூறுவர். அக்கரைப்பற்று, பழுகாமம், களுவாஞ்சிக்குடி, தம்பிலுவில், தம்பட்டை ஆகிய ஊர்களில் வீரசைவர் நிரந்தர வதிவிடமாகக் கொண்டு வாழ்கின்றனர்.

இவ்வூர்களில் நிரந்தர வாசிகளாய் வாழும் வீரசைவரைப் பகுதியினர் என்றும் திருமணம் முதலியவற்றால் ஊர்மாறி வாழ்வோரைத் தேசாந்திரி என்றும் சொல்வர். இவர்கள் விவசாயத்தைத் தமது வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். விவசாயத்துக்கு உதவியாகக் கறவைப் பசுக்களையும் எருமைகளையும் வளர்க்கின்றனர். இம்மக்கள் தம்மை இனம் காண்பதற்கு வசதியாகத் தாம் வளர்க்கும் விலங்குகளுக்குச் சூலக் குறி அடையாளம் இடுவர். அவ்வடையாளச் சூலத்தின் நடுப்பகுதியின் மேலும் கீழும் இருவேறு அடையாளங்கள் இட்டு இனங்காணச் செய்வர்.



ஈழத்துத் திருச்செந்தூர் என அழைக்கப்படும் திருக்கோயில் என்னும் ஊரிலுள்ள சித்திர வேலாயுத சுவாமி கோயில் அவ்வூருக்குப் பெரும் புகழ் ஈட்டிக் கொடுப்பதை அனைவரும் அறிவர். அப்பெருமான் கோயில் கொண்டுள்ள ஊரையடுத்த தம்பட்டைக் கிராமத்தில் சிவத்திரு நல்லதம்பிக் குருக்களும் அக்கரைப்பற்றில் சிவத்திரு முருகக் குருக்களும் பழுகாமத்தில் சிவத்திரு ஞானசேகரக் குருக்களும் தம்பிலுவிலில் சிவத்திரு தில்லைக் குருக்கள், சிவத்திரு ஆறுமுக தேசிகர் ஆகிய வீரசைவக் குருமாரும் இருந்து வீரசைவத்துக்கு நற்பணி ஆற்றியுள்ளனர்.

இவர்களைப் போன்றவர்களின் முயற்சிகளால் முன்னர் குறிப்பிட்ட ஊர்களில் வாழும் வீரசைவர் இலிங்க தாரணம் பெற்றுக் கோயிற் பூசைகளிலும் அலங்காரக் கலைகளிலும் தம்மை ஈடுபடுத்தி இறை பணி ஆற்றுவதோடு அறிநெறி நின்று பிற முயற்சிகளும் செய்கின்றனர். அவ்வாறே பிற்காலத்தில் இந்தியாவின் தென்னகத்தில் வாழ்ந்த இம்மரபினர் இங்கு வந்து மலையகத்திலும் பரந்து வாழ்கின்றனர்.

இன்னும், வீரசைவப் பழங்குடி மக்கள் ஈழத்தின் வடக்கே யாழ்ப்பாணத்திலும் வாழ்ந்து வருவதை யாவரும் அறிவர். யாழ்ப்பாணத்து வீரசைவர்

விஜயநகரப் பேரரசின் காலத்தில் இங்கு வந்து குடியேறினர் என **ஈழத்தில் தமிழ்ப் பண்பாடு** (Tamil Culture in Ceylon by M. D. Raghavan) என்ற நூலை ஆதாரம் காட்டி **யாழ்ப்பாணத்து வீரசைவர்** என்ற நூலிற் குறிப்பிட்டுள்ளார் பல நூல்களின் ஆசிரியரான த. சண்முகசுந்தரம், B. A. அவர்கள்.

யாழ்ப்பாணத்திலே வண்ணார்பண்ணை ஐயனார் கோயிலடி, பெருமாள் கோயிலடிப் பகுதிகளிலும், இணுவில், கோண்டாவில், உரும்பிராய், சுன்னாகம், மானிப்பாய், மல்லாகம், அளவெட்டி, பண்டத்தரிப்பு, சண்டிலிப்பாய், கீரிமலை, காங்கேசன்துறை, மயிலிட்டி, ஏழாலை, நாவற்குழி, மறவன்புலவு, கைதடி, சரசாலை, புலோலி, கொடிகாமம், கிளிநொச்சி ஆகிய ஊர்களிலும் இம் மரபினைச் சார்ந்த வீரசைவர்கள் வாழ்கின்றனர்.

வண்ணார்பண்ணை ஐயனார் கோயிலடியைச் சேர்ந்த வீரசைவர்கள் குருத்துவப் பணியிலும் தம்மை ஈடுபடுத்திவந்தனர். அவர்களின் பரம்பரையினரான சிவத்திரு கயிலாசதேசிகர் எனத் தீட்சா நாமம் கொண்ட சிவ. ஐயம்பிள்ளைக் குருக்கள் சம்ஸ்கிருதம், தமிழ், கன்னடம் ஆகிய மொழிகளில் அறிவு பெற்றவர். இவர் கீரிமலையில் ஸ்ரீ இரேணுகாச்சிரமம் அமைத்து வீரசைவ நெறிமுறைகளைப் பேணுவதிற் பெரிதும் ஊக்கம் காட்டி உழைத்துள்ளார். அவரது சேவை மறக்கற்பாற்றன்று.

அவருடைய காலத்தில் மற்றொரு வீரசைவ சிவாசாரியர் சுன்னாகத்தில் இருந்தார். அவர் பெயர் சி. மாணிக்கத்தியாகராஜா. சுன்னாகத்தைப் பிறந்த



கமாகக் கொண்ட பண்டிதர் மாணிக்கத்தியாகராஜக் குருக்கள் சிறந்த தமிழ்ப் புலமை பெற்றவர். இவர் சுன்னை அ. குமாரசுவாமிப் புலவரின் மாணவராய் இருந்து, அவரிடம் வடமொழி, தென்மொழிகளைத் துறைபோகக் கற்றவர். பண்டிதர் சி. மாணிக்கத்தியாகராஜக் குருக்களின் தமிழ்ப் புலமைக்கு அவர் இயற்றிய **வண்ணைச் சிலேடை வெண்பா** என்ற நூல் சான்றாகும். தமிழ்ப் புலமையும் சமய சாத்திர தோத்திரங்களின் அறிவும் நிரம்பப் பெற்றிருந்ததால் நல்லைநகர் நாவலர் மரபினையொட்டிச் சமயப் பிரசங்கத் திறமையும் இவர் பெற்றிருந்தார்.

மேலும் இலங்கைவாழ் மக்களாற் போற்றப் பட்டவரும் பிரித்தானிய மன்னரால் மதிக்கப் பெற்றவருமான சேர். பொன். இராமநாதன் அவர்கள் சிவத்திரு மாணிக்கத்தியாகராஜக் குருக்கள் மீது பெருமதிப்பு வைத்திருந்தார். அதனால் இராமநாதன் அவர்கள் எழுதிய இறுதி உயிலில் தமது உயிர் பிரிந்த பின்னர் உடலை இருத்திச் சமாதி வைக்க வேண்டும் என்றும் சமாதிக் கிரியையை வீரசைவக் குரு சி. மாணிக்கத்தியாகராஜ பண்டிதரைக் கொண்டே செய்விக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டிருந்தார். அதன்படியே அவரது சமாதியும் கிரியையும் இடம்பெற்றன.

கல்விமான்களாலும் சேர். பொன். இராமநாதன் போன்ற கண்ணியவான்களாலும் மதிப்பளித்துப் போற்றப்பட்டவர் வீரசைவக் குரு சி. மாணிக்கத்தியாகராஜ பண்டிதர். சுன்னாகம்

மாணிக்கப் பண்டிதர் என்று சுருக்கமாக எல்லோரா லும் அழைக்கப்பெற்ற இப்பெரியார் வீரசைவ சமயச் சார்பான சடங்குகள், கிரியைகள் செய்வதி லும் வல்லவர்; அவரது உத்தம சீடர் உரும்பிராய் பொ. கந்தையாக் குருக்கள்.

சிவத்திரு பொ. கந்தையாக் குருக்கள் சமயக் கிரியைகள் தொடர்பான சம்ஸ்கிருத அறிவுடன் தமிழ், ஆங்கில மொழிகளிலும் அறிவு பெற்றிருந் தார். ஆங்கில அறிவு பெற்றிருந்த காரணத்தால் காலியிலே நெடுஞ்சாலைத் திணைக்களத்தில் ''ஓவசியர்'' ஆகச் சிலகாலம் அரச பணி யாற்றினார். ஆயினும், அவரின் குலதெய்வமான உரும்பிராய் ஞான வயிரவ சுவாமி மீது கொண்ட பெரும்பக்தி அவர் ஆற்றிய பணியைத் துறக்கச் செய்துவிட்டது.

குருவின் வழிகாட்டலைப் பின்தொடர்ந்த சிவத்திரு பொ. கந்தையாக் குருக்கள் சமயக் கிரியைகள் செய்வதில் பொதுமக்கள் மனதைக் கவர்ந்தமை ஊரறிந்த உண்மை. அவரின் முன்னோர் களால் தாபிக்கப்பெற்று வழிபட்டுவந்த உரும்பிராய் ஞானவயிரவர் கோயிற் பூசைகளை நியமந் தவறாது செய்வதிலும் அதனை நன்கு நிருவகிப் பதிலும் குருக்கள் கண்ணும் கருத்துமாய் இருந்தார். வயிரவப் பெருமானிடம் வைத்திருந்த நம்பிக்கை யால் அப்பெருமான் உறையும் திருக்கோயிலை வைரக்கல்லினால் புதுக்கி அமைப்பித்ததோடு ஆலயத் தின் மகாமண்டபத்தில் நடேசருக்கான கோயிலும்



கட்டுவித்துப் பெருஞ்சாந்தி செய்து மகிழ்வுற்றார். தெற்குநோக்கிய வாயிலில் கோயில் கொண்டிருக் கும் நடேசப் பெருமானைத் தெருவீதி வழியே செல் வோர் பார்க்கும் பொழுது,

சாட எடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
விட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன் றோநம்மை ஆட்கொண்டதே.

என்ற அப்பர் திருப்பாடலே அவர்களின் நினைவுக்கு ஓடிவரும்.

அல்லும் பகலும் வயிரவப் பெருமானின் பேரருளை வேண்டிய குருக்கள் ஐயா, பக்தி பூர்வ மாகப் பூசைகள் செய்ததுடன் நிர்வாகத் திறமையி னால் பல புண்ணிய கைங்கரியங்களும் செய் துள்ளார். அவர் வழிபாடாற்றிய ஞானவயிரவர் கோயிற் பூசைகளை இன்றும் அவரது சந்ததி யினரே செய்து வருகின்றனர்.

சிவத்திரு பொ. கந்தையாக் குருக்கள் ஜீவந்த ராய் வாழ்ந்த காலத்தில் தமிழகத்தைச் சேர்ந்த வீரசைவரான திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் யாழ்ப்பாணத்துக்கு வரும்பொழுதெல் லாம் உரும்பிராய்க்கு வந்து, குருக்கள் ஐயாவை ஒருமுறை பார்த்துவிட்டே தமிழகம் மீள்வது வழக்கம்.

இந்தவகையில் மேற் குறிப்பிடப்பட்ட மூவரும் யாழ் மாவட்டத்தில் மாத்திரமன்றி, அதற்கு அப்பா லுள்ள மாவட்டங்களிலும் தமது சேவைகளை

ஆற்றியுள்ளனர். இம் மூவருடன் கீரிமலைச் சிவத்திரு தற்பரானந்த (தற்பர)க் குருக்கள், சிவத்திரு த. செல்லையாக் குருக்கள், யாழ்ப்பாணம் கந்த மடத்தைச் சேர்ந்த சித்தாந்த பண்டிதர் சிவத்திரு சி. பரமேஸ்வர (தம்பிமுத்து)க் குருக்கள், சரசாலை சிவத்திரு வே. கந்தையாக் குருக்கள் ஆகியோரும் கல்வி, கேள்விகளிலும் கருத்துப் பரிமாறல்களிலும் தம்மாலான பங்களிப்பை ஈந்து வீரசைவ மேம்பாட்டுக்கு உழைத்துள்ளனர்.

ஈழத்தின் வடக்கிலும் கிழக்கிலும் மலையகத்திலும் வாழும் ஆயிரக்கணக்கான வீரசைவர்களின் நடைமுறைகள் இந்நாட்டில் பண்டு தொட்டுப் பேணிவந்த பழக்கங்களாகும். இவை கன்னட நாட்டுக் கலாசாரத்திலிருந்து சிறிது வேறுபட்டிருந்த போதிலும், நெடுங் காலமாய் இருந்து வந்த நடைமுறைகள் இந்நாட்டின் தனித்துவத்தை எடுத்துரைப்பனவாம்.

இங்கு வாழும் வீரசைவர்கள் கல்வி ஞானமும் கலை ஞானமும் மிக்கவர்கள். சுருங்கச் சொல்லின் இசை, நடனம், கூத்து இவற்றில் இவர்களுக்கு அதிக ஈடுபாடு உண்டு. கிராமியக் கலை, கலாசாரம், சமயச் சடங்குகள் என்பனவற்றை எளிமையுடன் வளர்ப்பதற்கு இவர்கள் பெரிதும் உதவுகின்றனர். இவர்களிற் சிலர் ஆலயங்களுக்கு அர்ச்சகர்களாகவும், அலங்காரக் கலைஞர்களாகவும் சிவநெறித் தொண்டு செய்வதுடன் வேளாண்மை, வாணிகம் முதலிய அறவழித் தொழில்களும்



ஆற்றுகின்றனர். அவை மட்டுமன்றி ஆசிரியப் பணி, அரசசேவைப் பணிகளிலும் முன்னின்றுழைத்துச் சமூகத் தொண்டுகள் செய்வதிலும் ஊக்கம் காட்டி வருகின்றனர்.

**தீத் தெய்வ வழிபாடு (அக்கினி காரியம்)**

தீத் தெய்வ வழிபாடு மிகத் தொன்மையானது. இன்புறு தமிழின் இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் காலத்துக்கு முன்பிருந்தே தமிழ் நாட்டில் இது நிலவி வருகிறது. கொடிநிலை, கந்தழி, வள்ளியென மூவித வழிபாடு இருந்ததெனத் தொல்காப்பியர் தமக்கு முன்னே வாழ்ந்த மக்களின் மரபு முறைகளை ஏற்று, அதற்கமைய நூல் செய்தவர். ஆதலின் அவர் ஆக்கிய தொல்காப்பியச் சூத்திரங்களில் தமது கருத்தாகச் சொல்லுமிடத்து ''என்மனார் புலவர்'' எனக் குறிப்பிடுகின்றார். இங்கு கந்தழி என்பது தீத் தெய்வ வழிபாட்டைக் குறிப்பிடுகின்றது.

'கொடி நிலை' என்பது கீழ்த் திசைக் கண்ணே நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் (சூரிய) மண்டிலம் என்றும் 'வள்ளி' என்பது தண்கதிர் (சந்திர) மண்டிலம் என்றும் இவ்விரண்டுக்கும் இடையேயுள்ள 'கந்தழி' என்பது ஒரு பற்றுக் கோடின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள் என்றும் நச்சினார்க்கினியர் பொருளுரைப்பர். மேற்கூறிய மூன்றுக்கும் நடுநின்ற கந்தழி என்ற சொல் கந்து+அழி எனப் பிரிக்கப்பட்டு, தன்னைப் பற்றுவனவற்றை அழிக்கும் தன்மையுடையது எனப் பொருள்படும். தீயானது தன்னைச் சேர்ந்தவற்றை

அழிப்பதால் ஆன்மாவைப் பிணித்துள்ள மும்மலங்களையும் எரித்து, அதற்கு வீடுபேற்றைக் கொடுக்க வல்ல மாசிலா அருவான பொருள். எனவே 'கந்தழி' என்பது ஈண்டு தீயைக் குறிக்கின்றது. இதனாலேயே இறைவனுக்குக் கொடுக்கும் அவிப்பாகத்தை அக்கினியில் இடும் வழக்கம் நீண்ட காலமாய் இருந்து வருகின்றது.

ஆகவே பழந் தமிழர் பண்பாட்டை ஒட்டியும் சமயச் சடங்குகளைத் தழுவியும் ஆசாரியர் சீடனுடைய ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் என்னும் மூவித தத்துவங்களையும் அவற்றுக்குரிய சுத்தியின் போது எரித்து நாசம் செய்யும் படி மந்திராக்கினி இடத்தே வேண்டுதல் வழக்கம்.

வீரசைவர் இலிங்க தாரணம் செய்யும் பொழுது தீத் தெய்வ வழிபாடு செய்தே தாரணம் செய்யப்படுகிறது. அவ்வாறு தாரண தீட்சை பெற்ற வீரசைவருக்குரிய கிரியைகளில் அக்கினி வழிபாடு வேண்டிய தன்று. ஆயின், இலிங்காயதரல்லாத சாமானிய வீரசைவர்கள் மேற் குறிப்பிட்டவற்றின் சுத்தியின் பொருட்டு அது வேண்டியதாகும். பொது விதியையும் சிறப்பு விதியையும் ஒன்றாகக் கருதி இடர்ப்படாது, மேற் சொல்லிய தீட்சை நிலை பெற்றவர்கள் அதற்கேற்றவாறு செய்து கொள்ளலாம்.



வீரசைவ மரபினர் பூர்வக் கிரியையிலும் சமாதிக் கிரியையிலும் அக்கினி வளர்த்தல் மேற் போந்த காரணங்களினாலேயே செய்யப்படுகின்றது என்பதை மனதிற் கொள்ளுதல் மயக்கம் தீர்ப்பதாகும்.

**வெண்ணூல் (உபவீதம்) அணிதல்**

வேதமோதி **வெண்ணூல் பூண்டு** வெள்ளையெருதேறிப்
பூதஞ் சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாத வெனவு நக்கா வெனவு நம்பா வெனநின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே.

எனப் பழனநகரத்தில் எழுந்தருளிய பரம்பொருளின் திருக்கோலத்தை அழகொழுகப் பாடியுள்ளார் ஆளுடையபிள்ளையார். உமை அம்மையின் ஞானப் பால் உண்ட ஞானக் குழந்தை **வெண்ணூல்** எனக்கூறுவது சிவபெருமான் அணிந்திருக்கும் பூணூலையே குறிக்கின்றது. மார்பிலே வெண்ணூல் அணிந்து, அரையிலே புலித்தோல் உடுத்து, வாயிலே வேதம் ஒலித்திட வெள்ளை எருதேறிப் பூதம் புடைசூழப் பொலிவுடன் எழுந்தருள்பவர் பழனநகரத்து ஆபத்சகாயர். அப்பெருமானின் அருட்கோலத்தை நயமுறப் படமாகக் காட்டுகின்றது ஞானசம்பந்தரின் நற்றமிழ்ப் பாடல்.

வெண்ணூலைப் பூணூல், முப்புரி நூல் எனத் தென்மொழியிலும் உபவீதம், யஜ்ஞோபவீதம் என வடமொழியிலும் குறிப்பிடுவர். உபநயனச் சடங்கின் போதே உபவீதம் அணியப்படுகிறது. வடமொழியில் உபநயனம் என்பதை உப+ நயனம்

எனப் பிரித்துப் பொருள் கொள்ளுமிடத்து, உதவிக் கண் என்று பொருள்தரும். மனிதருக்கு இற்கையாய் உள்ள புறக்கண்களோடு அகக் கண்ணாகிய ஞானக் கண் பெறுதல் என்பதே உபநயனமாம். அந்நிகழ் வில் பூணூல் அணிதல் இடம்பெறும். பூணூல் என் பது முப்புரிகளாலானது. ஆன்மாவுடன் கூடிய ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களை நீக்கி, வெள்ளை உள்ளம் உடையவராக்குதல் என்ற பொருளைத் தருவதே பூணூல் அணிதலின் திரண்ட கருத்தாகும்.

சனாதன தருமத்திலுள்ள நான்கு வருணங் களில் முதல் மூன்று வருணத்தவரும் முப்புரி நூலை எப்பொழுதும் அணிந்திருக்கலாம். நாலாம் வருணத் தவர் பூர்வ, அபரக் கிரியைகள் செய்யும் பொழுது மட்டுமே அணிவர். வீரசைவர் சிவவேடந் தாங்கி, சிவபிரான் அணிபவற்றைத் தாமும் அணிந்து, தம்மைச் சிவக்கோலத்தில் வைத்திருந்து வாழும் இயல்புடையர்; ஆதலின் அவர்கள் எப்பொழுதும் அணிந்திருக்கும் வழக்கம் ஏற்படலாயிற்று.

வீரசைவக் கிரியைகள் யாவும் பூர்வக் கிரியை களாகக் கொள்ளப்படுவதால், சிவலிங்க ஐக்கிய மான ஒருவரின் உடல் குருவினால் சிவரூபம் ஆக்கப் பெற்று, அதற்குச் செய்யப்படும் சமாதிக் கிரியைகள் பூர்வக் கிரியைகளாகும். கிரியை செய்யும் பொழுது கர்த்தா (உரிமைக்காரர்) பூணூல் அணிந்திருக்க வேண்டும். கர்த்தா பூணூல் அணிந் திருக்கையில் குருவும் அணிந்திருப்பதே முறை.



வீரசைவக் கிரியை எதுவாயினும், அது பூர்வக் கிரியையாகவே கொள்ளப்படுதலின், சமாதிக் கிரியையில் கர்த்தாவானவர் பூணூலை இடது தோளிலேயே அணிதல் வேண்டும். கர்த்தா வாகிய சீடன் பூணூலை அணிந்திருக்கையில் ஆசாரியரும் அதணிந்திருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும்.

சாமானிய வீரசைவருக்கு மும்மல நீக்கத்தின் அடையாளமாகிய இஷ்டப் பிராண பாவலிங்க தாரணத்தின் போது நூலை மாலையாகப் போட்டு, அதில் இட்டலிங்க பந்தனம் செய்யப்படும். இலிங்காயதர் குருத்துவம் (ஆசாரிய அபிடே கம்) பெறும் பொழுது வெண்ணூலை இடது தோளில் அணிந்து வலப்புறமாகத் தொங்கவிடுவர். அவ்விதம் அணிந்துள்ள நூலில் இட்டலிங்கத்தைப் பந்தனம் செய்யலாம். அவ்வாறு பந்தனம் செய்த இலிங்கத்தைக் கொப்பூழின் கீழ் தாழவிடாது கவனித்தல் அதனை அணிந்திருப்பவரின் கடமை ஆகும். இட்டலிங்கம் அணிந்திருக்க வேண்டிய இடங்களுள் நாபியும் (கொப்பூழும்) ஒன்றாதலின் வெண்ணூலிற் பந்தனம் செய்த இட்டலிங்கத்தைக் கொப்பூழில் தாங்கி வைத்திருத்தல் வேண்டும்.

வீரசைவ சமாதிக் கிரியையில் கர்த்தா வெண் ணூல் அணிவது வீரசைவக் கிரியை ஒழுங்கு முறை யும் பழைய மரபுமாகும். அதனால் கிரியைசெய்யும் பொழுது குருவும் சீடனும் வெண்ணூலை அணிந்

திருத்தல் வேண்டும். இதுவே முன்னாளில் தமிழ் நாட்டு ஆசாரம். வீரசைவ ரொருவர் தோற்றத்திற் சிவனை ஒத்திருப்பர் என்பதைத் திருமந்திரம் முதலிய வற்றின் வாயிலாக அறியலாம். வடமொழியில் சிவபெருமானின் தோற்றத்தைக் குறிப்பிடுகையில், அப்பெருமானின் திருத் தோளில் இலங்கும் நூல் ''சுக்கில யஜ்ஞோப வீதம்...'' என்று சிவபெருமானின் தியான சுலோகத்திற் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும் ''ஞான நிஷ்டா ஞான யஜ்ஞோப வீதிந;'' என்றும் ''பிரம்ம பாவமிதம் சூத்திரம் தாரயேத்'' என்றும் இலிங்கோப நிடதத்தில் பூணூல் பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.

மேற் குறிப்பிட்ட உபநிடத சூத்திரங்களின் தமிழாக்கத்தை ஈண்டு கவனிப்போம்:

''இதம் பிரம்ப பாவம் சூத்திரம் தாரயேத்'' — முதன்மைத் தன்மையைக் குறிக்கும் முப்புரி நூல் (குரு-ஆசாரியர் — அணிந்திருத்தல் வேண்டும்).

''ஞான சிஹிநோ ஞானநிஷ்டா ஞான யஜ்ஞோப வீதிந:'' — ஞானமாகிய குடுமியும் ஞானத்தைக் கொடுக்கும் நிட்டை (சமாதி) கூடலும் (ஞான நிலைக்கு ஆளாக்கும்) கிரியைக்குரிய உபவீதமும் (குரு அணிந்திருத்தல் வேண்டும்).

''துவி ஹஸ்தம் பத்ம ஸம்ஸ்தஞ்ச சுக்கில யஜ்ஞோப வீதிந:'' — இருகைகளோடும் பத்ம (தாமரை) ஆசனத்திலிருந்து கிரியைக்குரிய வெண்ணிற உபவீதமும் (குரு அணிதல் வேண்டும்).



''பஹிர் சூத்திரம் தியஜேத் வித்வான் யோகமுத்தம மாஸ்திதம்'' பஹிர் — வெளியே, சூத்திரம் — பூணூல், தியஜேத் — விடுதல், வித்வான் — ஞானி, ஆஸ்தி — செல்வம்.

ஞானியாய் உள்ளவன் வெளிப்படையாக அணிகின்ற பூணூலைத் தவிர்த்து விடுவான். அவனுக்கு யோக நெறியே உத்தமமான செல்வம். ஞானி பூணூல் அணிவதைத் தவிர்த்து விடுவான் என்பதால் ஏனைய ஆசாரியர் நூல் அணிவர் என்பது அருத்தாபத்தி.

இவ்வாறு வெண்ணூல் அணிந்திருத்தல் பற்றிய பொருள் பொதிந்த கருத்துக்கள் இலிங்கோப நிடதத்திற் குறிப்பிட்டிருத்தல் நோக்கத்தக்கது.

இன்னும், கற்றறிந்தடங்கிய சான்றாண்மையுள்ள ஆசாரியர் இறை பக்தியும் உயிர்களிடத்துக் கருணையும் கொண்டவராவர். உயிர்களிடமுள்ள அன்பின் மிகுதியை வெளிக்காட்டும் தண்ணளி உடையவரை அந்தணர் எனக் கூறுதல் ஆன்றோர் வழக்கு.

''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்''

என்பது வள்ளுவர் வாக்கு. இக்குறட்பாவில் வரும் ''அந்தணர்'' என்ற சொல்லுக்கு உயிர்கள் மாட்டு அழகிய தண்ணளி உடையவர் எனப் பரிமேலழகர் பொருள் கூறுவர். அன்பும் அறமும் பண்பெனக் கொண்ட அந்தணரின் வடிவத்தைக் குறிப்பிடவந்த தொகாப்பியர்—

"அந்த ணாளர்க் குரியவும்......"
(தொல். பொருள். மரபியல்)

என்ற சூத்திரத்தில் அந்தணாளர்க்கு உரியன வென்பது முந்நூலும் மணியும் போல்வன என்பர் பேராசிரியர். மேலும் ஆசாரியரின் தோற்றப் பொலிவைக் கூறுமிடத்து—

"தேசிகர்க்குச் சின்னமு மைந்துண்டு; திருநீறொன்
றாசரிக்குங் கண்டிகையுமொன் றாகும்."

*　　　*　　　*

"உரித்துப விதமு முத்தரியந் தானு
முரித்துட்டி ணிடந்தா னும்"

தேசிகர் — ஆசாரியர், கண்டி — உருத்திராக்கம், உபவீதம் பூணூல், உட்டிணீடம் — உஷ்ணீஷம் என்ற வட சொல்லின் திரிபு, தலைச் சீலையைக் குறிக்கும். அதாவது விதிப்படி செய்யப்பட்ட தலைப்பாகை எனப் பொருள்படும்.

ஈண்டு ஆசாரியர் இலக்கணம் கூறுமுகத்தால் ஆசாரியருக்கு உரிய முத்திரைகள் ஐந்து; அவை திருநீறு, கண்டிகை, பூணூல், உத்தரீயம், தலைச் சீலை (தலைப்பாகை) என்பணவாம். இவற்றைக் குறிப்பிடும் மேற்போந்த குறட் பாக்கள் சைவசமயநெறி என்ற நூலிலுள்ளன. இதனை ஆக்கியவர் சிதம்பரம் மறைஞானசம்பந்த நாயனார். இதற்கு நாவலர் பெருமான் எழுதிய புத்துரையின் தெளிவையே மேலே கண்டோம். இதிலிருந்து ஆசாரியர் அணிந் திருக்க வேண்டியவற்றுள் வெண்ணூலும் ஒன்றென்பது போதரும்.



வீரசைவர் வெண்ணூல் அணிவதை மாற்றத் துணிந்தவர் வசவதேவர். அவர் கன்னட நாட்டு வேதியர் குலத்தவர். மக்கள் வாழ்க்கை பல்வேறு நிலையிலும் செழிக்கவேண்டு மென்று வசவண்ணா விரும்பினார். அவரது காலத்திலே நாட்டில் நிலவிய வருணாச்சிரம முறைகளை முற்றாக வெறுத்தார். தனது குல ஒழுக்கத்துக்கு அடையாள மாய் இருந்த முப்புரிநூல் அணிதலும் காயத்திரி செபம் செய்தலும் வேண்டுவதில்லை என்று விடுத்தார். ஆயினும், சிவ வழிபாட்டைக் கைவிட வில்லை. அதனால் பக்திநெறியில் முன்னின்று ஒழுகும் வீரசைவத்தைச் சார்ந்து, இட்டலிங்க வழிபாடாற்றினார். வீரசைவத்தில் விருப்பம் கொண்ட வசவதேவர் அதனைப் பல துறையிற் புனரமைத்துள்ளார்.

வசவதேவரின் வீரசைவ கலாசாரம் கன்னட நாட்டில் நன்கு கைக்கொள்ளப்பட்டு வருகிறது. முன்னைய ஆசாரியர்கள் கடைப்பிடித்த விதிமுறை களும் அங்குண்டு. வசவரின் ஆக்கப் பணிகள் காலத்துக்கு ஏற்றதெனக் கருதியதால் விழிப்புற்ற வீரசைவ சமயாசாரம் தமிழ் நாட்டிலும் பரவலா யிற்று. அக்கலாசாரத்தைத் தமிழரது பண்பாட்டுக்கு ஏற்பச் செம்மை செய்து வாழ்ந்தனர் தமிழகத்து வீரசைவர்.

ஈழத்து வீரசைவர் தமிழ் நாட்டுக் கலாசா ரத்தை அடியொற்றியும் ஈழத்தில் பலகாலமாய் நடை முறையில் இருந்தவற்றைப் பின்பற்றியுமே தமது சமய ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிக் கின்றனர்.

**திருப் பொற்சுண்ணம்:**

சூர்ணோத்சவம் என்னும் சுண்ணம் இடித்தல் இறைவன் திருவுருவுக்கு மஞ்சனம் ஆட்டுதற்கு வேண்டிய மஞ்சள், அறுகு முதலியவற்றை உரலி லிட்டுப் பொடி (சூரணம்) ஆக்குதற்குச் செய்யப் படுகிறது. பண்டைத் தமிழகத்தில் இவ்வாறு பொற்சுண்ணம் இடிப்பதைக் கண்ணுற்ற மாணிக்க வாசகர் அதனை இடிக்கும் மங்கையரை நோக்கி இறையுணர்வுடன் பெருமான் புகழ்பாடி இடிக்குமாறு அறிவுரை கூறுகின்றார்:

மாடு நகைவாள் நிலாவெறிப்ப
    வாய்திறந்து அம்பவளம் துடிப்பப்
பாடுமின் நந்தம்மை ஆண்டவாறும்
    பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடி
தேடுமின் எம்பெருமா னைத்தேடிச்
    சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்கு
    ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

என்பது திருப்பொற் சுண்ணப் பாடலாகும். இது சிந்தையும் செயலும் புறவழிச்செல்லாது, தானன்றி நிற்றலாகிய ஆனந்த மனோலயத்தில் நின்று பாடப் பெற்றதாகும்.

இத்தகைய இறை இன்பஞ் சொட்டும் இனிய பாடலைக் கேட்டுப் பழகிவந்த மக்கள் இன்றும் அவ்வாறான நடைமுறைகளைச் செய்து வருகின்ற னர். வீரசைவரின் சமாதிக் கிரியையில் குருவான வர் சிவலிங்க ஐக்கியமானவரின் உயிர் நீத்த உடலை முதலிற் சிவரூபமாக்குவார். அதனைத்



தொடர்ந்து அதற்கு நீராட்டுச் செய்தலான அபி டேகத்துக்குரிய மஞ்சள், அறுகு முதலிய பொருள் களை உரலில் இட்டுப் பொடி செய்யப்படுகிறது.

சிவைக்கியமானவரின் உடல் சார்ந்த தநு, கரணம், புவனம், போகம் ஆகிய பற்றுக்களை இடித்து நொருக்கி இல்லாமற் செய்தல் என்னும் பாங்கில் பொற்சுண்ணம் இடித்தல் அமைகிறது. உடல் தொடர்பு நீக்கப்பட்ட ஆன்மா சிவலோகஞ் சேரத் தகுதியாகும் வேளையில் அவ்வான்மாவுக்கு அங்கு (சிவலோகத்தில்) வரவேற்பு நிகழும். அந் நிகழ்வை வெளிப்படுத்தும் ஓசையும் பொருள் விளக்கமும் திருப்பொற் சுண்ணப் பாடல்களிற் பொதிந்துள்ளன. அதனால் இறையுணர்வு செறிந் துள்ள அப்பாடல்கள் பொற்சுண்ணம் இடிக்கும் பொழுது படிக்கப்படுகின்றன.

பொற்சுண்ணம் இடித்தல் உயிர் நீத்த உடலுக்கு நீராட்டுவதன் முன் செய்யாமற் பின்னர் செய்யும் வழக்கமும் உண்டு. அவ்வாறு நிகழ்தல் அவ்வுடல் தாங்கியிருந்த ஆன்மாவின் மும்மல நாசத்தைக் குறிக்கும் வகையிற் செய்யப்படுகிறது.

இவ்விரண்டு முறைகளுள் உடலை நீராட்டு தற்கு முன் பொற்சுண்ணம் இடித்தல் யுத்தி, அனுப வங்களுக்கு இயைவதாகும். அவ்வாறன்றிப் பின்னர் செய்வது அலங்காரத்துக்கு முதன்மை அளிப்பதாக அமைகின்றது. இதனை ஒருமனதாக, ஒத்த கருத் துடன் சமூக ரீதியாக இணைந்து செய்தல் நன்று.

இலிங்காயதருக்குத் தாரண தீட்சையின் போது விசேட கிரியைகள் இடம் பெறுவதால் அத் தீட்சை பெற்றவர்களின் சமாதிக் கிரியையிலே பொற் சுண்ணம் இடித்தலாகிய நிகழ்வு வேண்டிய தில்லை. அவர்கள் காயத்துள் மென்மேலும் இறை யின்பம் காண்பவர். மற்றையோர் மாயையினால் மூடப்பட்டு அதன் மறைப்புக்கு உள்ளாவதுண்டு. அத்தகைய இயல்பினருக்கு இலிங்காயதருக்கான கிரியையைச் செய்தல் அவசியமன்று.

அச்சூழ்நிலையில் ஓடிமீள்கென ஆடல் பார்த் திருக்கும் இறை வடிவாகிய குருவானவர் தாரண தீட்சை பெறாதோர் மீது கொண்ட இரக்கத்தால் அவர்களைப் பக்குவர் ஆக்குதற் கேற்ற கிரியையைச் செய்வார்.

அதற்கமைவாகவே யாழ்ப்பாணம் ஐயனார் கோயிலடியைப் பிறந்தகமாகவும் கீரிமலையை வாழ்வகமாகவும் கொண்ட சிவத்திரு சி. ஐயம்பிள்ளைக் குருக்கள், அவரது முன்னோராகிய சிவத்திரு சிவசிதம்பரக் குருக்கள், சிவத்திரு நாகமுத்துக் குருக்கள் ஆகியோர் சமாதிக் கிரியை யில் அக்கினி காரியம், சூர்னோத்சவம் என்பவற் றைச் செய்தே தமது கிரியைகளை நடத்தினர்.

பின்னாளில் சிவத்திரு ஐயம்பிள்ளைக் குருக்கள் கன்னட நாட்டுக்குச் சென்று, அங்கு வசவேசர் ஏற்படுத்திய வீரசைவ கலாசாரத்தைக் கண்டு அதனைத் தழுவித் தாம் முன்னர் நடந்து கொண்ட முறைகளை மாற்றிக் கொண்டார்.



தமிழக வீரசைவருக்குத் தமிழ் நாட்டிலுள்ளோர் அனுசரித்து வந்த வீரசைவ கலாசாரமே வேண்டிய தாகும். ஈழத்தைப் பொறுத்த வரையில் தமிழக வீரசைவ கலாசாரத்தை அனுசரித்து நடப்பதோடு இங்கு பல்லாண்டுகளாக நடைமுறையிலுள்ள கலாசாரத்தைக் கடைப்பிடித்து வருவதும் கவனிக்கத் தக்கது.

**வீரசைவர்களிடம் அமைந்திருக்க வேண்டிய பண்புகள் :**

வீரசைவ நெறியின் அடிப்படை உண்மையை நோக்குமிடத்து, அது ஒரு தன்னலம் பேணும் நெறி யன்று; அத்துடன் கொடுக்க ஏற்கும் அல்லது கேட்டு வாங்கும் நெறியும் அன்று. வீரசைவ நெறி சமூக நலத்தை நோக்காகக் கொண்டது. வீரசைவர் நாள் தோறும் சிவலிங்க வணக்கம் செய்ய வேண்டும்; அத்துடன் அறவழியில் ஈட்டிய செல்வத்தைத் தக்காருக்கு ஈந்து, சங்கம வழிபாடு செய்வதிலும் கருத்துடையராய் இருத்தல் அவசிய மாகும். வீரசைவத்தைச் சார்ந்தவர்கள் உண்மை பேசி, உறுதியுடன் உரைத்து, நெஞ்சுக்கு நீதியாக நடந்து கொள்ள வேண்டும். அங்கலிங்கியாய் இருந்து கொண்டு மனச்சான்றுக்கு மாறானவற்றில் ஈடுபடுதல் ஏற்றதன்று.

'' தன்நெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்,
தன்நெஞ்சே தன்னைச் சுடும். ''

* * *

'' புறந்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும் ''

என்பர் செந்நாப்போதார். அஃதாவது ஒருவன் தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றைக் குறித்துப் பொய் சொல்லக் கூடாது. பொய் சொன்னால், அதைக் குறித்துத் தன் நெஞ்சமே தன்னை வருத்தும். மேலும் புறத்தே தூய்மையாக விளங்குதல் நீரினால் ஏற்படும்; அதுபோல், அகத்தே தூய்மையாக விளங்குதல் உண்மை பேசுதலால் உண்டாகும் என்பதைத் தெய்வ நீதியாகக் கொண்டொழுகுதல் சால்பாகும்.

**வீரசைவ நூல்கள் :**

வீரசைவம் பற்றித் தமிழிலே விரிவாகக் கூறும் நூல்கள் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் செய்த பிரபுலிங்க லீலை, சித்தாந்த சிகாமணி ஆகிய இரண்டும் முக்கியமானவை. அத்துடன் வசவ புராணம் என்ற ஓர் அருமையான நூலும் உண்டு. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. வடமொழியிலே சிவயோகி சிவாசாரியாரின் வீரசைவ சித்தாந்த சிகாமணி, மொக்கய்யா மாயிதேவரின் அநுபவ சூத்திரம் அத்துடன் இலிங்கோபநிஷதம் என்பவை குறிப்பிடற் பாலன.

மேலும், அண்மைக் காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் மெய்யியல்துறை விரிவுரையாளராய் இருந்த வீரசைவ சீலரான கலாநிதி வை. இரத்தின சபாபதி M. A. Ph. D. அவர்களால் தொகுக்கப்பட்ட வீரசைவம் என்ற ஆய்வு நூலும் வீரசைவம் பற்றிய பல செய்திகளை வெளிப்படுத்துகின்றது.



தமிழ் வேதமாகிய பன்னிரு திருமுறைகளிலே வீரசைவ நெறி முறைகளின் உண்மைகள் தொடர்பாக மணிவாசகரின் திருவாசகத்திலும் திருமூலரின் திருமந்திரம் — ஏழாம் தந்திரத்திலும் குறிப்பிடப் பட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

கன்னட மொழியில் வீரசைவம் சார்ந்த நூல்கள் பலவுண்டெனச் சொல்லப்படுகின்றது. அவை தமிழில் மொழிபெயர்க்கப் பெற்று வெளிவருதல் வேண்டும்.

பொதுவகையிலே வீரசைவ இயக்கத்தின் உயர்வுக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், குமாரதேவர், சாந்தலிங்க சுவாமிகள், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் போன்ற சான்றோர் எழுதிய தமிழ் நூல்கள் வாயிலாகத் தலையாய தொண்டுகள் செய்துள்ளனர். இவர்கள் நிறுவிய மடங்கள் இன்றும் தமிழகத்தில் உள்ளன.

**வீரசைவ மடங்கள்:**

இப்பொழுது தமிழ் நாட்டிலுள்ள வீரசைவ மடங்களில் முக்கியமானவை புதுவையை அடுத்த பொம்மை புரத்திலுள்ளதும் திருக்கோவலூர் ஞானியார் மடமும், திருக்குடந்தையிலுள்ள பெரியமடமும் ஆகும். அத்துடன் கன்னட மாநிலத்தில் பெங்களூரிலும் மைசூரிலும் வீரசைவ மடங்கள் நிறுவப் பெற்றுள்ளன. இவ்வாறு ஈழத்திலும் பொது நோக்குடன் மடங்கள் நிறுவி, வீரசைவ மரபினைப் பேணுதல் விரும்பற்பாலது.

**நிறைவுரை:**

சிவபெருமானைப் பரமபதியாகப் போற்றிடும் நெறியினைக் கொண்டது வீரசைவம். சக்தியை விட்டு வேறாகாத சிவபிரானின் குறியாக அமைந்

திருப்பது சிவலிங்கம். இதனைச் சதாசிவத் திருமேனி என்று சொல்வர். சிவபெருமானை அல்லும் பகலும் அனவரதமும் தொழுபவர் வீரசைவர். அவர்கள் அப்பெருமானைப் பிரிந்திருக்க மனமின்றித் தமது அங்கத்தில் அணிந்திருப்பர். அவ்வாறு இலிங்கதாரி களாய் இருப்போர் இலிங்காயதர் ஆவர்.

இலிங்காயதர் நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் சிவசிந்தனைசெய்பவர். சிவநினைப்பன்றிப் பிறி தொன்றும் நினையாத வீரசைவர் வைதிகக் கட்டுப் பாடுகளுக்குள் முற்றும் அமையாதவர்.

செய்யும் தொழில் எதுவாயினும் அதனைச் சிவப் பணியாக மதித்து நடப்பதே வீரசைவக் கோட்பாடு. ''தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே!'' என்ற நோக்குடன் பஞ்சாசாரம், அட்டாவரணம், சடுத்தலம் ஆகிய படிமுறைகளைக் கடைப்பிடித்து ஒழுகுதல் வீரசைவக் கொள்கை ஆகும்.

வீரசைவர் சிவ ஐக்கியமாதலை (சாமரஸ்ய முத்தியை)க் குறியாகக்கொண்டு ஒழுகுதல் வேண்டும். அவர்கள் தனி அறமும் பொது அறமும் பேணி உலக நன்மைக்காக இறைவனைத் துதிக்கும் இயல் பினர்.

''தரிக்கிலேன் காயவாழ்க்கை சங்கரா போற்றி'' எனப் பணியும் சீரிய பண்பு வீரசைவத் தில் அழுத்தமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வகையில் சிவநெறிக்குச் செம்மை சேர்க்கும் வீர சைவர் அனைவரும் தமது மரபினை ஐக்கியத்துடன் பேணுதல் கடனாகும்.

# வீரசைவம் வளர்த்த சான்றோர்

## I. அல்லமாப்பிரபு தேவர்

ஆன்மாக்கள் அனுபவிக்கும் உலகியல் இன்பத் தினையும் அடைய வேண்டிய முத்திப்பேற்றினையும் அளிப்பவர் பரம் பொருளாவார். அவரை இறைவன் என்று உலகோர் ஏத்துவர். அவ்விறைவன் மானிடச் சட்டை தாங்கி **அல்லமதேவர்** என்ற பெயருடன் புவனியில் திரிந்து வீரசைவத்தை வளர்த்துள்ளார் என வீரசைவம் சார்ந்த நூல்கள் இயம்பும். கண்டோர் காமுறும் கட்டழகு, இளமை, பொலிவு அனைத்தும் திரண்ட வொரு மானிட வடிவமே அல்லமதேவர் ஆவார். அவரது காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு ஆகும்.

அல்லமதேவர் தோன்றிய வரலாற்றை ஆயும் போது உலகம் உய்யத் தோன்றிய முருகனின் வரலாறே நினைவுக்கு வரும். அஃதாவது அரக்கர் ஆதிக்கத்தில் அமரர் நலிவுற்றிருந்த வேளையிலே சிவபிரானின் நெற்றிக் கண்ணிலிருந்து முருகப் பெருமான் தோன்றினார் என்று கந்தபுராணம் கூறும். அவ்வாறே வீரசைவ மதம் சோர் வுற்றிருந்த போது தென்னகத்தில் **வன்னிகாவை** என்ற ஊரிலே **நிராங்காரன், சுஞ்ஞானி** என்ற இருவரும் இல்லறம் நடத்தி —

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"

என்றவகையில் கொஞ்சி மகிழக் குழந்தைச்செல்வம் வேண்டி இறைவனிடம் முறையிட்டனர். தமது எண்ணம் நிறைவெய்தற்பொருட்டு நிராங்காரன் மனதை ஒருவழிப்படுத்தினார். அத்துடன் அவரின் சிந்தனை இறைவனிடம் பதிய ஒன்பது திங்கள் சிவயோக சமாதியில் இருந்தார்.

நிராங்காரனின் கடுந்தவம் காரணமாக அவரது நெற்றியில் இருந்து ஒளி திரண்டு குழந்தை வடிவிலே வெளியில் வந்து கிடந்தது. அச்செல்வக் குழந்தையே அல்லமாப்பிரபு எனப் பிரபுலிங்கலீலை கூறும்.

அல்லமாப்பிரபு என்ற தெய்வக் குழந்தை தோற்றுவிக்கப் பெற்றதிலிருந்து ஓர் உண்மை புலனாகின்றது. அஃதாவது இறைவனால் மட்டுமே முருகன் போன்ற தொரு குழந்தையைத் தோற்றுவிக்கலாம் என்பதோடல்லாமல், மானிடராலும் அவ்வாறு ஒரு குழந்தையை அளிக்க இயலும் என்பதற்கு அல்லமாப்பிரபு தோற்றுவிக்கப் பெற்ற வரலாற்றிலிருந்து தெரிய வருகின்றது.

கி. பி. 12ஆம் நூற்றாண்டிலே வீரசைவ வளர்ச்சிக்காக உழைத்தவர்களுள் அல்லமதேவரும் வசவதேவரும் குறிப்பிடத் தக்கவர்களாவர். அவர்கள் இருவரும் ஊரூராய்த் திரிந்து வீரசைவ மேன்மைகளை மக்கள் மனதிற் பதியச் செய்துள்ளனர்.



வீரசைவ மரபின்படி சங்கம வழிபாடும் மகேசுர பூசையும் வீரசைவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய முக்கிய நடை முறைகளாம்.

இவற்றில் சங்கமர் வழிபாட்டைப் பொன்னே போல் போற்றியவர் அல்லமதேவர். சிவனடியார்களான சங்கமரை மகேசுரர், மாகேசுரர் என்றெல்லாம் கூறுவதுண்டு. மகேசுர பூசையின் சிறப்பை நேராக நின்று விளக்கிக் காட்டியவர் அல்லமதேவர். இவ்வுண்மையை அவர்காலத்தவரான வசவதேவர் மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளார்.

ஒரு முறை வசவர் மாளிகைக்கு அல்லமதேவர் வருகை தருவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அதற்கமைய விருந்தாளியாக வரும் அல்லமருக்கு மாத்திரமன்றிச் சங்கமர் பலருக்கும் அங்கு உணவு தயாரிக்கப் பெற்றிருந்தது. குறித்த அந்நாளன்று அல்லமதேவரின் வருகை தாமதமானது. அவர் வருகையை எதிர்பார்த்திருந்ததால், அங்கு கூடியிருந்த சங்கமர் பசியால் வருந்துவதை வசவர் பொருட்படுத்தவில்லை. அல்லமர் வந்ததும் அவரை வரவேற்பதிலேயே அனைவரும் கவனம் செலுத்தினர். அதனைக்கண்ட சங்கமர்கள் கோபங் கொண்டு உணவு அருந்தாமல் வெளியே சென்று விட்டனர்.

அல்லமதேவர் அதனை அறியாது தமக்கு அளிக்கப்பட்ட உணவை உட்கொண்டார். பின்னர், அங்கு நிகழ்ந்த செய்தி அவருக்குத் தெரியவந்தது. உண்ணாமல் சென்றவர்களை உள்ளே அழைத்து

வருமாறு அயலே நின்றவர்களிடம் அல்லமர் சொன்னார். அதன்படி வெளியே சென்ற சங்கமர்களை அழைத்தபோது, ''கை, வாய் தொடாமல் உணவு அருந்திவிட்டோம்'' என்று அவர்கள் கூறினர்.

என்னே புதுமை! செந்தீயிலிட்ட அவியுணவு தேவருக்கு அமுதம் ஆனாற் போல் சங்கமருக்காகச் சமைத்த உணவு அல்லமர் உண்டதும் தமது வயிறு பூரித்து விட்டதாகச் சங்கமர்கள் கூறினர். அவ்வாறு அவர்களின் வயிறு பூரித்தமை அல்லமாப்பிரபு தேவரின் அதிதீவிர பக்குவத்தையே காட்டுகிறது.

> ''உலகி லொருவன் சிவயோகி உண்டநம்ம சராசரங்கள்
> அலகி லுயிர்க ளெலாமுண்ட தாகும்............''

என்று பிரபுலிங்கலீலை சிறப்பித்துக் கூறும். இதனை—

> ''அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
> சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
> பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
> நிகரிலை என்பது நிச்சயந் தானே''

எனத் திருமந்திரமும் அறுதியிட்டுக் கூறுதல் கவனிக்கத் தக்கது.

ஆண்டவன் அன்பர்களின் பக்தி வலையிற் படுபவர்; அத்துடன் மெய்யடியார்களின் துன்பம் களையுந் தூய்மையர். அவர் மக்களை ஆட்கொள்வதற்காக மனித வடிவில் மண்ணில் தோன்றுவார் என்பது சமய நூல் துணிபு.



> ''பக்தி வலையிற் படுவோன் காண்க''

என்பது திருவாசகம்.

இந்தவகையில் மண்ணுலக மாந்தரை ஆட்கொள்வதற்காகத் தோற்றிய வடிவமே அல்லமாப்பிரபு தேவர் எனச்சிவப்பிரகாச சுவாமிகள் கூறுவர். பிரபு லிங்க லீலையிற் கூறப்படும் கற்பனா சொரூபி ஆகிய அல்லமதேவர், மாயாதேவிக்குக் கட்டுப்படாது மத்தளிகனாகவும் அக்கமாதேவியின் பக்திக்குக் கட்டுப்படும் ஞானியாகவும் தம்மைக்காட்டிக் கொண்டார். இங்கு கூறப்படும் அக்கமாதேவியின் பக்தி திருத்தொண்டர் புராணத்திற் பேசப்படும் காரைக்கால் அம்மையாரின் பக்திக்கும் நம்மாழ்வார் வரலாற்றில் இடம் பெறும் ஆண்டாள் நாச்சியாரின் பக்திக்கும் ஒப்பானது என வீரசைவர் புகழ்ந்துரைப்பர்.

கன்னட நாட்டு வசவண்ணருக்கும் அவரது காலத்திலிருந்த வீரசைவ மெய்யடியார்களுக்கும் அல்லமதேவர் காட்சிகொடுத்துள்ளார். அல்லமர் மெய்யடியார்களின் அன்புக்குக் கட்டுப்பட்டும் போற்றப்பட்டும் தேடப்பட்டும் அவர்களை நல்வழிப்படுத்தியும் மானிலத்தில் உலாவியும் வந்துள்ளார். அல்லமாப்பிரபு மாயையை வென்ற திறமும் மகேசுர பூசையை மெச்சிய மாண்பும் அன்பர்க்கு எளியராய்த் தோன்றிய சிறப்பும் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஈண்டு அல்லமாப்பிரபு என்ற சொல்லை அல்ல+மா+பிரபு என மூன்றாகப் பிரித்து, பின்வருமாறு பொருள்கொள்வோம்:

அல்ல — மாயையை அல்லவென — நிலையற்ற
பொருளென — மறுக்கப்படுவது.
மா — பெரிய, மகத்துவமான.
பிரபு — செம்மை சான்ற முதற் பொருள்.

அதாவது மாயையை அல்லவென மறுக்கும் மகத்துவ முதற் பொருளே அல்லமாப்பிரபு எனப்பொருள்படும்

ஆகவே தொட்டியின் நீரில் தோன்றும் சந்திரன் அதற்குள் கட்டுப்பட்டுக் காட்சியளிப்பினும், சீவாத்மா மாயையினிடத்தும் மாயை வடிவங்களிடத்தும் அகப்படுவது போல் தோற்றி, அதற்கப்பாலுள்ள வானத்துச் சந்திரனைப் போல் அவற்றை நிலையற்றன வென்று காணச் செய்து, கடந்து நிற்கும் மகத்துவமான இலிங்கமாகிய செம்பொருளே அல்லமதேவர் என்பது உணரற்பாற்று. விரிவைப் பிரபுலிங்கலீலை, வசவ புராணம் முதலிய வற்றில் காண்க.

---

# II. வசவதேவர்

வீரசைவத்தின் வளர்ச்சிக்கும் அதன் மேம்பாட்டுக்கும் உழைத்தசான்றோர் வரிசையில் வசவதேவர் மிக முக்கியமானவர். அவர் பழைய மூடப் பழக்க வழக்கங்களையும் வர்ணாச்சிரமக் கோட்பாடுகளையும் இறுகப் பிடித்து வந்த மக்களிடையே மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார். மக்களைப் புதிய பாதையில் ஈடுபடச் செய்தற்குத் துணிவையே



துணையாகக் கொண்டார். அத்துடன் தனது செயற்பாடுகள் அனைத்தையும் செயல் முறையில் காட்டி வாழ்ந்த திறமையும் அவரிடம் இருந்தது.

சைவநெறியில் வீரம்செறிந்தபோதனைகளைச் சாதனைகள் மூலம் வெளிக்காட்டிய வசவதேவரை வசவேசர், பசவர், வசவண்ணா, வசவையா என்றெல்லாம் வாய் இனிக்கச் சொல்வதில் அவர்காலத்து மக்கள் பெருமகிழ்ச்சி எய்தினர்.

வசவதேவர் கர்னாடக மாநிலத்திலே 12ஆம் நூற்றாண்டில் மாதரஸா என்ற வேதியச் சிவனடியாருக்கும் மாதலாம்பிகா அம்மையாருக்கும் தவப் புதல்வராகப் பிறந்தார். பெற்றோர் இவரின் இயல்பான குணத்தினை அறியாது அன்பாக வளர்த்தனர். அவர்கள் வசவருக்கு எட்டு வயதானதும் வேதியர் குலத்துக்கு அடையாள மாகிய முப்புரி நூல்அணிவதற்கு ஏற்பாடு செய்தனர். அப்பொழுது அந்நூல் தனக்கு வேண்டியதில்லை எனக் கூறி, அதனை அணியாது விட்டார்.

வர்ணாச்சிரம தர்மம், சமய சம்பிரதாயங்கள், ஆண் — பெண் வேறுபாடுகள், ஏழை — பணக்காரர் என்ற ஏற்றத் தாழ்வுகள், தீட்டுத் — துடக்குகள், சாதிப் பிரிவுகள் யாவும் சமூகத்தில் இருப்பதை வசவதேவர் முற்றாக வெறுத்தார். அதே வேளையில் புதிய சமுதாயம் ஒன்றை உருவாக்க வேணவாக் கொண்டார்,

சாதி ஒழிப்பும் சமதர்மக் கொள்கைகளும் முளை கொள்ளு முன்னரே வசவண்ணா அவற்றைக் கையாளத் தொடங்கினார். எனினும், எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளைத் தன் அகத்திலும் புறத்திலும் அவர் நேசித்தார். அதனால் சிவலிங் கத்தைத் தனது அங்கத்தில் அணிந்து கொண்டு, வீரசைவ சமயியாகவாழ விரும்பினார்.

சிவஞானம் காணவிழைந்த வசவதேவர் ஈசான்ய குரு என்ற குருநாதரிடம் தீட்சைபெற்று, அங்கலிங்கி ஆகினார். அந்நாள் முதல் வீரசைவத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து, அதனை வளர்ப்பதில் தம்மாலான பணிகளை எல்லாம் செய்தார்.

வசவதேவர் கல்வி அறிவும் மதிநுட்பமும் நிரம்பப் பெற்றவர். அவரிடம் செயற் திறமையும் ஆளு மையும் அறிவுக் கூர்மையும் இயல்பாய் இருந்தன. அவரது ஆற்றல் விச்சல மன்னனின் செவிக்கு எட்ட லானது. வசவதேவரின் மாமனாரான பலதேவர் மறைந்ததும் அவர் வகித்த அமைச்சர் பதவி வசவ தேவரைத் தேடிவந்தது. தொண்டுள்ளம் கொண்ட வசவருக்குக் கிடைத்த முதலமைச்சர் பதவி அவரது செயற்பாடுகளை மேலோங்கச் செய்தது.

வீரசைவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை நிறுவ விரும்பிய வசவேசர் அவரது காலத்தில் வாழ்ந்த அல்லமாப்பிரபு என்ற சிவனடியாரைத் தமக்குத் துணைவராகச் சேர்த்துக் கொண்டார். வீரசை வத்தின் வளர்ச்சிக்காக அவர்கள் இருவரும் கூறிய மொழிகள் இன்று வீரசைவ தத்துவ நூல்களாக



விளங்குகின்றன. வீரசைவத்தின் முக்கிய அங்கங் களான குரு, இலிங்கம், சங்கமம், குருபாதம், பிர சாதம், விபூதி, உருத்திராக்கம், பஞ்சாட்சரம் ஆகிய வற்றைக் கைக்கொண்டு சங்கம வழிபாடு நடத்து வதிலும் பேரார்வம் காட்டினார்.

சமத்துவம், சகோதரத்துவம், அன்புடைமை என்பன மக்கள் மனத்தில் மலரவும், உண்மை, பக்தி, ஞானம் ஆகியவற்றை வளர்க்கவும் தற்புகழ்ச்சி, இகழ்ச்சிகளை இல்லாதொழிக்கவும் வசவர் அரும் பாடுபட்டார். இவர் எல்லாரிடத்திலும் அன்பும் கருணையும் காட்டினார். பசுவைக் களவாட வந்த கள்வன் ஏழ்மை காரணமாகவே களவாடினான் என்று இரங்கி, அவனை மன்னித்த மாண்பும் அவரிடம் இருந்தது.

அதே வேளையில் வீரசைவத்துக்கு மாறான வழிகளில் ஈடுபடுவோரை வீரத்துடன் எதிர்த்து வீர சைவத்துக்குப் புத்துயிர் அளித்துள்ளார். இதனால் ஒரு கோடிக்கு மேற்பட்ட மக்களைக் கொண்ட கன்னட மாநிலம், ஆந்திரப்பிரதேசம், வடஇந்தியா, தமிழ் நாடு, ஈழம், வட அமெரிக்கா போன்ற நாடு களிலெல்லாம் வீரசைவத்தைச் சார்ந்த மக்கள் பரவி வாழ்ந்து, அம்மதக் கோட்பாடுகளை இன்றும் பேணி வருகின்றனர்.

வைதிக நெறியிலே ''சாதி, குலம், பிறப்பு என்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறி'' மக்கள் அல்லற் பட்ட காலத்தில் வீரசைவ மதக் கொள்கைகளைத் துடிப்புள்ளதாக விளங்கச் செய்ய வசவர் விரும்

பினார். பழமையில் ஊறிய மக்கள் ஆடம்பரக் கிரியைகளுக்காகக் காலம் கழிப்பதை அவர் கண்டித்தார். ஏழை,எளிய மக்களிடையே தாமும் கலந்து கொண்டு மனித குலம் ஆத்மஞானம் பெறவேண்டும் எனப் போதித்தார்.

வசவையர் மாளிகையில் சங்கமர்களுக்கு மகேசுர பூசை நடைபெற விருந்ததை இரண்டு கள்வர்கள் ஒரு நாள் அறிந்து கொண்டனர். அங்கு கூடியிருந்த சங்கமர்களின் கழுத்தில் ஏதோ கட்டித் தொங்க விட்டிருப்பதை அவதானித்தனர். சங்கமர்களின் கழுத்தில்தொங்குவது இன்னதெனத் தெரியாத கள்வர் வழுதுணங்காயை (கத்தரிக் காயை)த் துணியிற் கட்டித் தமது கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டனர். சிறிது நேரத்தின் பின், பகல் உணவுக்கு அழைப்பு வந்ததும், ஆட்களோடு ஆட்களாகக் கள்வர் இருவரும் உள்ளே சென்று பந்தியில் இருந்து கொண்டனர். உணவு பரிமாறத் தொடங்கியாயிற்று; வசவேசர் உள்ளே நுழைந்தார்.

உடனே சங்கமர்கள் தாம் அணிந்திருந்த அங்கலிங்கங்களைக் கையில் எடுத்துக் கொண்டனர். அவர்களின் இட்டலிங்க பரசிவ பூசையை நிறை வேற்றத் தொடங்கினார் வசவேசர். அவர்களுக்குத் தூப, தீப ஆராத்திகளை எடுத்து வழிபாடு செய்த வசவண்ணா கள்வர் இருந்த இடத்தை நெருங்கி வந்தார். கள்வர்கள் தமது அடாத செயலை எண்ணி நடுக்கமுற்றனர். அவர்களை அணுகிய வசவேசர் அவர்களின் இட்டலிங்கத்தை வெளியே எடுக்கச் சொன்னார்.



அவர்கள் ஏக்கமுற்று விழித்தனர்! கள்ள வேடதாரிகளின் உண்மை நிலையை உணர்ந்த வசவேசர், அவர்கள் கட்டியிருந்த கத்தரிக்காய்களை இட்டலிங்கமாக மாறிடத் திருவருள் நோக்கம் செய்தார்.

என்ன அதிசயம்! கள்வர்களின் கழுத்தில் தொங்க விட்டிருந்த துணியை அவிழ்த்துத் திறந்த பொழுது, அவர்கள் கட்டிய கத்தரிக்காய்களைக் காணவில்லை. பதிலாக இஷ்டலிங்கமே இருந்தது. இச் செயற்கருஞ் செயலை -

''வெள்ள வேணிப் பெருந்தகைக்கு யாம்செய் அடிமை மெய்யாக
கள்ளவேடம் புனைந்திருந்த கள்வரெல்லாங் களங்கமறும்
உள்ளமோடு மெய்யடியாராக உள்ளத்துள்ளும் அருள்
வள்ளலாகும் வசவேசன் மலர்த்தாள் தலையால் வணங்குவாம்''

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பிரபுலிங்கலீலையில் போற்றித் துதித்துள்ளார்.

பழமையில் தோய்ந்திருந்த மக்களை வறுமை -செல்வம், உயர்வு - தாழ்வு என்ற பாகுபாடுகளுக்கு உட்படுத்தாது, இலிங்கதாரிகளாய் வாழ்ந்தோர் அனைவருக்கும் தம்மாலான தொண்டுகளைச் செய்தவர் வசவண்ணா. விச்சல மன்னனின் முதலமைச்சராய் இருந்த இவர், தமது உள்ளத்தில் சரியானதெனத் தெரிந்தவற்றைச் செய்வதில் ஒரு போதும் தயங்கியது கிடையாது. அதனால் அவரே வீரசைவத்தைத் தோற்றுவித்தவர் என்று சிலர் உரைப்பதுண்டு. அது தவறான கருத்தாகும். ஆனால் சோர்வுற்றிருந்த வீரசைவத்துக்குப் புத்துயிரளித்த பெருமை வசவரையே சாரும்.

எடுத்த முயற்சியில் வெற்றியீட்டுதற்குத் தமது இஷ்ட தெய்வமான கூடலசங்கம தேவராகிய சங்கமேஸ்வர சுவாமியை வேண்டிக்கொள்வார். ''கூடல சங்கமதேவா !'' என முன்மொழிந்தே எப் பணியையும் வசவர் செய்தார். அத்துடன் வீரசைவம் பற்றிய தனது பிரசாரங்களைக் கன்னட தேசத்தவர் அனைவருக்கும் விளங்கக்கூடிய கன்னட மொழியிலேயே செய்தார். வசவையரின் பணி மக்களிடையே நன் மதிப்பைப் பெற்றது. இதனால் வீரசைவம் விழுப்பம் எய்தி, வீறு நடைபோட உதவியதை எவரும் மறுக்க வியலாது. இவரின் சில கொள்கைகள் இவரது சிவப்பேற்றின் பிறகு மாற்றமடைந்து விட்டதாகப் பிந்திய செய்திகள் வெளியிடுகின்றன.

---

## III. சிவப்பிரகாசர்

வீரசைவத்தின் சிறப்பை அழகொழுக எழுதிப் பரப்பியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். இவரது காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு என்பர். இவர் வடமொழி, தென்மொழி இரண்டிலும் நிறைந்த புலமை பெற்றவர். இவரது நூல்களில் எளிமை, இனிமை, கற்பனை யாவும் கலந்திருக்கும். அதனால் இவரைக் கற்பனைக் களஞ்சியம் எனக் கற்றறிந்தோர் போற்றுவர்.

சிவப்பிரகாச சுவாமிகள் காஞ்சிமாநகரில் தொண்டைமண்டல மரபினருக்குக் குருவாய் இருந்த குமாரசுவாமி தேசிகரின் தலைமகனாவார். இறை



யன்பு மிக்க சிவப்பிரகாசருக்கு வேலையர், கருணைப்பிரகாசர் என்ற இரு தம்பியரும் ஞானாம்பிகை என்ற ஒரு தங்கையும் இருந்தனர்.

இவர்களின் தந்தையான குமாரசுவாமி தேசிகர் நியமந் தவறாது சிவபூசை செய்பவர். இவர் ஒருமுறை திருவண்ணாமலைத் திருக்கார்த்திகை விழாக்காண யாத்திரை செய்தார். அங்கு செல்லும் வழியிலே பகற் காலப் பூசையை முடித்த பின்னர் சாயங்காலம் திருவண்ணாமலையைச் சென்றடைந்தார். அத்தலத்திலிருந்த ஈசான தீர்த்தத்தில் நீராடி, அநுட்டானங்களை முடித்துக் கொண்ட தேசிகர், சிவபூசைக்கானபெட்டகம்எங்கேயெனவினவினார். அன்று பகற் பூசை செய்த இடத்தில் அதனைத் தவறுதலாக வைத்து விட்டு வந்ததாகத் தெரிய வந்தது.

கலக்கமுற்ற தேசிகர் தமது ஆத்மார்த்த தெய்வத்தைப் பிரிந்திருக்க நேர்ந்ததை எண்ணி இரவு முழுவதும் விழித்திருந்தார். அவரது நிலைக்கு இரங்கிய அண்ணாமலையர், ஓர் அடியவர் வடிவத்தில் தோன்றி '' அங்கம் வேறு, இலிங்கம் வேறு என்ற வகையில் வழிபட்டுவந்ததாலேயே இவ்வாறு பிரியலாயிற்று. அதனை அங்கத்தில் அணிந்து கொண்டால், பிரிய நேரிடமாட்டாது '' எனக் கூறி '' மறு நாட்காலையில் பெட்டகம் வந்து சேரும் '' என்றும் அருளுரை பகர்ந்தார்.

அன்னவரின் அருள்வாக்கின்படி மறுநாட்காலையிற் பூசைப் பெட்டகம் வந்து சேர்ந்தது. தேசிகர்

அளவற்ற ஆனந்தம் அடைந்தார். அடியவரின் அருளுரைக்கு அமைய அவ்வாலயத்துக்குத் தெற்கு வீதியில் இருந்த குருதேவரிடம் சென்று தாரண தீட்சை பெற்றார்.

சிவலிங்க தாரணம் செய்து கொண்ட பின்னரே சிவப்பிரகாசர் முதலிய நான்கு பிள்ளைகள் இவருக்குக் கிடைக்கப் பெற்றனர். இவர்கள் இள வயதினராய் இருந்த பொழுது தந்தையார் சிவைக்கியம் ஆகிவிட்டார். இதனால் மூத்தவரான சிவப்பிரகாசருக்கே குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஏற்படலாயிற்று.

அவர்கள் நால்வரும் அருணாசலத்தில் தங்கி இருந்த காலத்தில் அண்ணாமலை அப்பன் மீது **சோணசைல மாலை** என்ற தோத்திர நூலைச் சிவப்பிரகாசர் செய்தருளினார்.

சிவப்பிரகாசர் தமது புலமையை வளம்படுத்துவதற்கு இலக்கணப் பயிற்சியின் அவசியத்தை உணர்ந்தார். அதனால் அருணாசலத்தைவிட்டுத் துறைமங்கலத்துக்குச் சென்றார். சுவாமிகள் தனது சகோதரர்களுடன் அங்கு வந்திருந்த வேளையில், அண்ணாமலை ரெட்டியார் என்ற குருலிங்க சங்கமரின் தொடர்பு ஏற்படலானது. அக்காலத்தில் ரெட்டியாருக்குச் சிவப்பிரகாசர் சன்மார்க்கங்களைப் போதித்துவந்தார்.

துறைமங்கலத்திலே நல்ல முறையில் நேரம் கழிந்த போதிலும், இலக்கணப் பயிற்சி பெற வேண்டும் என்ற ஆவல் சிவப்பிரகாசருக்குத் தணியவில்லை. எனவே, அங்கிருந்து திருநெல்வேலிக்குச் சென்றார். சுவாமிகள் அவ்விடத்தில் தங்கி இருந்த போது, தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வெள்ளியம்பலத் தம்பிரானைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. தம்பிரான் சுவாமிகளின் இலக்கணப் புலமையை அறிந்த சிவப்பிரகாசர், அவரிடம் சென்று தமது விருப்பத்தைத் தெரிவித்தார்.



அதனைக் கேட்டறிந்த தம்பிரான், அவரது இலக்கியப் பயிற்சியை அறிதற் பொருட்டு ''கு'' என்று எடுத்து, இடையிலே '' ஊருடையான் என்று'' வைத்து, 'கு' என்று முடிப்பதாக வெண்பா ஒன்றைப் புனையுமாறு கேட்டார். உடனே,

''குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குங் கேழன்
முடக்கோடு முன்ன மணிவார்க்கு — வடக்கோடு
தேருடையான் றெவ்வுயிர்க்குத் தில்லைத்தோள் மேற்கொள்ளல்
ஊருடையான் னென்னு முலகு.''

என்ற வெண்பாவைச் சிவப்பிரகாசர் பாடி முடித்தார்.

பொருள் பொதிந்த அவரது பாடலைத் தம்பிரான் வியந்தார். மட்டற்ற மகிழ்ச்சியுற்றுத் தமது ஆசனத்துக்குச் சமமாக அவரை இருக்கச் செய்தார். பின்னர் சிவப்பிரகாசரின் தம்பியர்களுக்கும் ஐந்திலக்கணங்களையும் கற்பித்து அவரது ஆவலை நிறைவேற்றினார்.

தம்பிரான் சுவாமிகள் குரு தட்சணை எதனையும் ஏற்றுக் கொள்ளவில்லை. பதிலாகத் தமக்கு எதிராகத் திருச்செந்தூரில் தமிழ்ப் புலவர் ஒருவர்

இருப்பதாகச் சொல்லி, அவரைக் கல்வியினால் வென்று, தம்மிடம் வரச் செய்யுமாறு கேட்டுக் கொண்டார்.

அதற்கிணங்கிய சிவப்பிரகாசர் திருச்செந்தூருக்குச்சென்றார். ஆங்கு செந்தூர் முருகனை வணங்கிவரும் நாளில், தம்பிரான் சுவாமிகள் சொன்ன புலவரைச் சந்திக்கலானார். சிவப்பிரகாசரின் ஆற்றலை அறியாத அப்புலவர் அவரைச் சோதிக்க விரும்பினார். நிரோட்டக யமகம் ஒன்று பாடுமாறு கேட்டு, அதனைப் புனைவதில் யார் வெற்றி பெறுகின்றாரோ, அவர் மற்றவருக்குப் பணிதல் வேண்டும் என நிபந்தனை இட்டார்.

சிவப்பிரகாசர் திருச் செந்தினிரோட்டக யமகவந்தாதி என்ற நூலைக் கலித்துறையில் தோத்திரமாகப் பாடி முடித்தார். தமிழ்ப் புலவருக்கு ஒரு பாடலும் நிரம்பவில்லை. புலவர் தமது தோல்வியை ஒப்புக் கொண்டார். கல்விச் செருக்கிழந்த அப்புலவரைச் சிவப்பிரகாசர் தம்முடன் அழைத்துச் சென்று தம்பிரானுக்குப் பணியச் செய்வித்தார்.

இறை இன்பத்தில் மூழ்கி இருந்த சிவப்பிரகாச சுவாமிகள் துறைமங்கலத்துக்கு மீண்டு வந்தார். அங்கு சிலகாலம் தங்கியிருந்த சுவாமிகள் வேங்கை மாநகரத்திற் கோயில் கொண்டிருந்த பழமலை நாதர் மீது வேங்கைக் கோவை, வேங்கைக் கலம்பகம், வேங்கை உலா, வேங்கை அலங்காரம் என்னும் நான்கு பிரபந்தங்களைச் செய்தருளினார். பின்பு விருத்தாசலம் சென்று பழமலைநாதர் மீது அந்தாதி, பிட்சாடண நவமணிமாலை



கொச்சக் கலிப்பா நூல்களும் பெரியநாயகி அம்மை பேரில் கலித்துறையும், கழிநெடில் விருத்தமும் பாடியருளினார்.

பின்னர் பேரூரிலிருந்த சாந்தலிங்க சுவாமிகளைச் சிவப்பிரகாசர் சந்திக்க நேர்ந்தது. அங்கிருந்தபோது சாந்தலிங்கரின் விருப்பப்படி பாலைய சுவாமிகள் பேரில் தாலாட்டு, நெஞ்சுவிடு தூது, கலம்பகம் ஆகிய நூல்களை ஆக்கிச் சன்னிதானத்தில் அரங்கேற்றினார். அதன் பின் தமது தங்கையாகிய ஞானாம்பிகையைச் சாந்தலிங்கருக்குத் திருமணம் செய்து வைத்தார்.

சிவப்பிரகாசர் மணப் பருவம் எய்திய காலத்தும் அதனை விரும்பாது துறவற வாழ்வையே விரும்பினார். அவர் மணவாழ்வைத் துறந்த போதிலும், அவரது தம்பியர் இருவரையும் இல்லறத்தில் இருக்கச் செய்தார்.

கடவுள் பக்தியில் திளைத்த சுவாமிகள் உறுதி கொண்ட உள்ளம் படைத்தவர். மானிடர் மாயையை வெல்லுதல் இயலும் என்பதை வெளிப்படுத்தும் வகையில் பிரபு லிங்க லீலை என்ற கற்பனைக் காவியத்தைப் படைத்துள்ளார்.

பிரபு லிங்க லீலை என்பது பிரபு + லிங்க + லீலை எனப் பிரிக்கின், இலிங்கமாகிய ஆன்மாவின் திருவிளையாடல் எனப் பொருள்தரும். ஈண்டு, இறைவி மாயையின் வல்லமையால் இறைவனாகிய அல்லமதேவனைத் தன்வயப்படுத்த முயன்ற

போதிலும், அல்லமதேவன் தனது திருவிளையாட்டினால் மாயையை வென்று, தனது ஆற்றலை வெளிக்காட்டுவதாக இக்காவியம் புனையப்பட்டுள்ளது. இந்நூல் படிப்போர் நெஞ்சங்களைக் கொள்ளை கொள்ளும் ஒரு செஞ்சொற் காவியமாகும்.

மேலும் வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்த சித்தாந்த சிகாமணி என்ற இவரது நூல் வீரசைவக் கோட்பாடுகளையும்' அதனை வளர்த்த சிவாசாரியார்களையும் செம்மையுறச் செப்புகின்றது. அடுத்து இவர் ஆக்கிய வேதாந்த சூடாமணி, சிவப்பிரகாச விகாசம், தர்க்க பரிபாஷை, நிரஞ்சன மாலை, கைத்தல மாலை, அபிஷேக மாலை, இட்டலிங்கப் பெருங்கழி நெடில், குறுங்கழிநெடில், நன்னெறி, சிவநாம மகிமை, நால்வர் நான் மணி மாலை என்னும் நூல்களைச் செய்துள்ளார். சிவலிங்க வழிபாட்டிலும் சாத்திர, தோத்திர நூல்களை ஆக்குவதிலும் அக்கறை கொண்டிருந்த சுவாமிகள் நாற்பத்தைந்துக்கு மேற்பட்ட நூல்களை ஆக்கியுள்ளார்.

இவரைப் போலவே இவரது தம்பியான வேலையா சுவாமிகள் நல்லூர்ப் புராணம், இஷ்ட லிங்கக் கைத்தல மாலை, கும்பகோணம் சாரங்க தேவரின் வரலாறு கூறும் வீரசிங்காதன புராணம், குருநமசிவாயரின் வரலாற்றைச் செப்பும் நமசிவாய லீலை, கிருஷ்ணா பாரிசாத லீலை, மயிலத் திரட்டை மணி மாலை ஆகிய பிரபந்தங்களைச் செய்துள்ளார்.

அவ்வாறே கடையவரான கருணைப்பிரகாசர் இஷ்டலிங்க அகவல், திருக்காளத்தி புராணத்தில் — சீகாளத்திச் சருக்கம் வரையிலுமுள்ள பாடல்களைப் பாடியுள்ளார். இப்புராணம் முற்றுப்பெறு முன்னர் தமது 18 ஆவது வயதிலே வேங்கை மாநகரத்தில் சிவலிங்க ஐக்கியமாய்ச் சமாதியாகினார்.



கருணைப்பிரகாசர் எழுதி, முற்றுறாதிருந்த புராணத்தில் கண்ணப்பர் சருக்கமும், நக்கீரர் சருக்கமும் சிவப்பிரகாசர் செய்தருளிய வேளையில், நல்காத்தூரிலுள்ள பாலைய சுவாமிகளால் விடப்பட்டிருந்த மடத்தில் சிவலிங்க ஐக்கியமாகினார்.

மீந்திருந்த திருக்காளத்தி புராணத்தைச் சிவப்பிரகாசரின் இளவலான வேலைய சுவாமிகள் முற்று வித்துத் தமது எழுபத்திரண்டாவது வயதிலே பெருமத்தூர் மடத்தில் சிவலிங்க ஐக்கியம் ஆகினார்.

செந்தமிழ் நாட்டில் சிவப்பிரகாச சுவாமிகளும் தம்பியரும் தந்தையாரும் வீரசைவத்தைப் பேணி வளர்த்துள்ளனர். அத்துடன் தமிழ்மொழிக்கும் தம்மாலான பெரும்பணி ஆற்றியுள்ளனர் என்பதில் மிகையொன்றுமில்லை.

தமிழ் இலக்கியப் பரப்பில் சிவப்பிரகாச சுவாமிகளின் நூல்கள் அருமையான இடத்தைப் பெற்றுள்ளன. பின்வரும் வெண்பா அவரின் செஞ்சொல் நயத்துக்கும் புலமைச் சிறப்புக்கும் நல்லதோர் உதாரணமாகும்:

எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ — பைந்தொடீஇ
நின்று பயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவுங் கனி.

— நன்னெறி

---

# IV. சாங்தலிங்க சுவாமிகள்

சாந்தலிங்க சுவாமிகள் தமிழகத்தின் நடு நாடாகிய தொண்டை நாட்டிலே வீரசைவ மரபில் வந்தவர். இவர் இளமைக் காலத்திற் கலைகள் அனைத்தையும் பயின்றார். கற்றாரைக் கற்றார் காமுறும் குண இயல்பினால் துறைமங்கலம் (துறையூர்) சிவப்பிரகாச சுவாமிகளின் கல்வி அறிவை மெச்சி, அவரிடம் ஞானோபதேசமும் பெற்றார்.

சிவப்பிரகாச சுவாமிகளிடம் சாந்தலிங்கர் வைத்திருந்த அன்பின் மிகுதியால் அவரின் தங்கையான ஞானாம்பிகையை மணந்துகொள்ளவும் இசைந்தார். ஞானாம்பிகையின் பக்குவ நிலை உணர்ந்த சுவாமிகள் அவரைப் பொம்மய பாளையம் ஸ்ரீ சிவஞானபாலைய தேசிகரிடம் ஆற்றுப்படுத்திப் பாடம் கேட்கச் செய்தார். சாந்தலிங்கர் சங்கம வழிபாட்டில் அதிக ஆர்வம் கொண்டவர். அதனால் தமக்கென ஒரு மடம் அமைத்து, அங்கிருந்து அறப்பணி ஆற்றினார்.

சாந்தலிங்கரின் மடம் கொங்கு நாட்டை (கோவை மாவட்டத்தை) அடுத்த மேலைச் சிதம்பரம் என்னும் பேரூரில் இருக்கிறது. இது காஞ்சிமா நதிக் கரையிலுள்ளது. இந்தமடாலயத்திலேயே ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகளின் சமாதிகொண்ட நினைவாலயமும் அமைந்துள்ளது.



நிரம்பிய கல்வி அறிவும் வீரசைவ ஆசாரமும் கொண்டிருந்த சாந்தலிங்கர் வீரசைவ அநுட்டானங்களைத் தவறாது கடைப்பிடித்து ஒழுகினார். வீரசைவத்தின் வளர்ச்சிக்குத் தம்மாலான பணிகளை அவர் ஆற்றியதோடு நூல்கள் வாயிலாகவும் தொண்டு செய்துள்ளார். அவர் இயற்றிய நூல்கள் வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார், கொலை மறுத்தல், நெஞ்சுவிடு தூது முதலியனவாகும்.

இவரிடம் காணப்பெற்ற கலைஞானமும் ஒழுக்க விசேடமும் திருப்பேரூர் சிதம்பர சுவாமிகளை இவரின் மாணவராகச் செய்தன. சாந்தலிங்கரின் கருத்தாழம் மிக்க கவிதை நூல்களைப் பாராட்டிய சிதம்பர சுவாமிகள் அந்நூல்களுக்கு உரையெழுதிச் சிறப்புச் செய்துள்ளார்.

ஸ்ரீ சாந்தலிங்கர் மனைவியோடிருப்பதைக் கண்டு ஐயுற்ற மாணவர்கட்கு உமா சகிதராகக் காட்சி கொடுத்து, இறைவராந் தன்மையை விளக்கினார். சுவாமிகளின் அருங்குணம் கண்ட மாணாக்கர் அவரைப் பணிந்து தம்மை மன்னித்தருள வேண்டினர்.

சிவபக்தியும் அடியார் பக்தியும் மேலோங்க, வீரசைவத்தை விளக்கமுறச் செய்த பெரியார்களை நோக்குமிடத்து, சாந்தலிங்க சுவாமிகளும் குறிப்பிடத்தக்க பங்களிப்புச் செய்துள்ளார். இவர் வீரசைவ நெறிமுறைகளை நூல்கள் வாயிலாகச் சிறப்புறச் செய்தபெருந்தகை ஆவார். சாந்தலிங்கர் வீரசைவ நடைமுறைப்படி முதலிலே சிவதீட்சை

பெற்றார். பின்பு சிவலிங்க தாரணம் செய்து இட்டலிங்க நிஷ்டாபரராய் (நியம நிட்டை தவறாத வராய்) தமது மரபினர்க்கு ஒரு வழிகாட்டியாக விளங்கினார்.

வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்து, தென்றமிழ்ச் சுவையை நன்கு சுவைத்தவர் சாந்தலிங்கர். தான் கற்றவற்றைத் தமது மாணாக்கர்கட்குக் கரவாது உதவும் பேராசிரியராயும் திகழ்ந்தார். இப்பெரியார் கற்றாரைக் காணுமிடத்துப் பெருமதிப்புச் செய்யும் பெருங்குணம் படைத்தவர். அதனாலேயே திருத்துறையூர் (துறைமங்கலம்) சிவப்பிரகாசரின் கல்வியறிவை மெச்சி, அவரின் அன்புக்கு ஆளாகினார். அத்துடன் நின்றுவிடாமல் சிவப்பிரகாசரின் சிவானுபவ சீலத்தைக் கண்டு அவரைத் தமது ஞானாசாரியராகவும் ஏற்றுக் கொண்டார்.

கருணை உள்ளம்கொண்ட சாந்தலிங்கர் விருத்தாசலம் ஸ்ரீமத் குமாரதேவ சுவாமிகளின் பக்குவம் உணர்ந்து அவருக்கு ஞானோபதேசம் செய்ய இசைந்தார். மேலும் திருப்பேரூர் சிதம்பரசுவாமிகளையும் தமது மாணவராகச் சேர்த்துக்கொண்டு அவருக்கு நல்லருள் சுரந்தார்.

கல்வி, கேள்விகளிற் சிறந்து விளங்கிய சாந்தலிங்க சுவாமிகள் தாம் கற்ற கல்வியைப் பலருக்கும் பயனுறச் செய்த பண்பினர். பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற மக்கள், வீட்டின்பத்தினை நுகர்வதற்கு வழிகாட்டியாக நற்றமிழ் நூல்களைச் செய்துள்ளார். அவர் ஆக்கிய முக்கிய நூல்கள்



ஐந்தும் அறிஞர் பலராலும் பாராட்டப் பெறுகின்றன. சுவாமிகளின் நூல்கள் வீரசைவர்கட்குச் சிறப்பு நூலாகவும் ஏனையோருக்குப் பொது நூலாகவும் விளங்குகின்றன. கொலை மறுத்தலைப்பற்றி நூல் செய்த ஆசிரியர்களுள் இப்பேரூர்ப்பிரானே தலைசிறந்து விளங்குகிறார். புலாலுண்ணாமையைத்தெளிவுறக் கூற வந்த வள்ளுவரும் ''ஒன்றாக நல்லது கொல்லாமை'' என்றே கொலை மறுத்தலை வலியுறுத்தியுள்ளார்.

''உயிர்த் தோற்றத்தில் உயர்வு தாழ்வு எங்ஙனம் உண்டாகியது?'' என ஒருவர் சுவாமிகளை வினவிய போது, ''பல்லுயிருள்ளும் மக்கட் பிறப்பே உயர்ந்ததெனவும், அதனுள்ளும் உயிர்க் கொலை புரியாதோர் உயர்ந்தோர்'' எனவும் கூறி, ''கொலைக்கு மேற்பட்ட பாவமும் கொல்லாமைக்கு மேற்பட்ட புண்ணியமும் வேறில்லை'' என்று விளக்கிய பெருமையும் இவருக்கு உண்டு.

அறிஞருக்கு அறிஞராய், ஞானியருக்கு ஞானியாய் வாழ்ந்த சாந்தலிங்கரின் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். சுவாமிகளின் குருபூசை அவரது சமாதி அமைந்துள்ள பேரூர் மடத்தில் ஆண்டுதோறும் கொண்டாடப் பெறுகிறது.

## தில்லைச்சிவன் உமையாளுடன் சாந்தலிங்கருக்குத் தோன்றியமை

பிரானே திருத்தில்லை யுளாய் அன்றிப் பேதையேன்முன்
ஒரானே றிவர்ந் தம்பிகை யோடெளி தோடி வந்தாய்
வரானோ வினம் எம்பிறை என்றுனை நாடி வாடி
இராநா யடியேற் கெதிர் தோன்றிலை இன்றிதென்னே.

— வைராக்கிய சதகம்

# V. ஸ்ரீ குமாரதேவர்

கன்னட நாட்டைப் பிறந்தகமாகக் கொண்ட குமாரதேவர் அரச வாழ்வைத் துறந்து, சங்கம வழிபாட்டை ஏற்ற செம்மனத்தராவார். இவர் அரசுக் கட்டிலில் இருந்த காலத்தில் பேரையூர் (பேரூர்) சாந்தலிங்க சுவாமிகளின் அறப்பணிகளையும் அறிவாற்றலையும் கேள்வியுற்றுத் தனது அரச இன்பத்தை விடுத்துச் சாந்தலிங்கரிடம் வந்து சேர்ந்தார்.

இவரை மாணவராக ஏற்றுக்கொள்ளச் சாந்த லிங்கர் முதலில் விரும்பவில்லை. காலப்போக்கில் குமாரதேவரின் பக்குவநிலை கண்டு தமது சீடனாக ஏற்றுக்கொண்டு, விருத்தாசலத்துக்குச் செல்லு மாறு கட்டளையிட்டார்.

அதற்கிசைந்த குமாரதேவர் விருத்தாசலம் சென்றார். அவரது வருகைக்காகக் காத்திருந்த திருமுது குன்றம் பெரியநாயகி அம்மை இளைப்புற்றிருந்த குமாரதேவரின் தலையைத் தனது மடிமீது வைத்துப் பசுவின் பாலை அருத்தினார். ஆயாசம் தீர்ந்த அடியவர் விழித்துப் பார்த்தபோது தனது இளைப் பைத்தீர்த்த கருணைத் தெய்வம் பெரியநாயகி என்ப தைத் தெரிந்து கொண்டார். குமாரதேவர் ஆனந்தம் எய்திய வேளையில் அன்னையின் திருவுருவம் மறைந்துவிட்டது. செய்வதறியாத குமாரதேவர் அம்பிகையைத் தோத்திரஞ் செய்து வணங்கினார்.



அன்னையின் அருளுக்குப் பாத்திரரான குமார தேவர் பூர்வ சென்மத்துத் தொடர்பினால் சில சித்துக்கள் கைவரப் பெற்றவரானார். அவர் செய்த அற்புதங்கள் வருமாறு:

1. விருத்தாசலத்திலே மணிமுத்தா நதிக் கரையில் நின்ற அரசமரத்தின் மேல் இருந்த சடாமுனி என்பவரின் சாபம் தீர்த்து, நல்வழி காட்டினார்.

2. ஒரு நாள் அன்னம் யாசித்துச்சென்ற குமாரதேவருக்கு குடும்பத்தர் ஒருவர் மாமிசம் கலந்த உணவைக் கொடுத் தார். அதனைத் தெரிந்து கொண்ட குமாரதேவர் அயலிலுள்ள குளத்துக்கு அருகிற் சென்றதும் அவரது உணவிற் கலந்திருந்த மாமிசம் உயிர்பெற்றுக் குளத்திற் குதித்துப் போய்விட்டது.

3. தொழுநோயினால் துன்புற்ற ஒருவன் குமாரதேவரிடம் வந்து முறையிட்டபொழுது அவனுக்குத் திருநீறுவழங்கி, நோய்தீர வகை செய்தார்.

4. திருவாரூர் தேர்த் திருவிழாவிலே தியாகேசப் பெருமான் தேரேறி மாடவீதியில் வந்த பொழுது பெருமானைப் பார்த்துக் குமாரதேவர் வணங்கினார். அதனைக் கண்ட இருவர் குமாரதேவரை வீரசைவ மருளெனக் விகட மாகக் கூறினர்.

அதனைக் கேட்ட குமாரதேவர் ''வீரசைவம் மருளாயின், தேர் ஊர்க; இல்லையாயின், நிக்க'' என்றார். தேர் நின்று விட்டது. காரணம் தெரியாது பலரும் கலக்கமுற்றனர். ஈற்றில் விடயம் அறிந்த தஞ்சை மன்னன் குமாரதேவரிடம் அணுகி, தேர் நகர்வதற்கு வழிசெய்யும்படி வேண்டினான். அவன் மீது இரக்கம் கொண்ட குமாரதேவர் ''வீரசைவம் அருளுடையதா

யின் தேர் ஊர்க; மருளுடைய தாயின், நிக்க" எனக் கூறியதும் தேர் நகரத் தொடங்கியது. இன்றும் அவ் வீதியில் தேர் வந்ததும், வீரசைவ சிவாசாரியர்கள் வந்து வடம் தொட்டு விடுவதாகக் கூறுவர்.

இவை போன்ற வேறும் அற்புதங்கள் செய்த குமாரதேவர் வீரசைவக் கோட்பாடுகளை உள்ளடக்கிய பதினாறு சாத்திரங்களைத் தமிழில் ஆக்கி, வீரசைவத்தை விளக்கமுறச் செய்ததோடு திருப்போரூர் சிதம்பரசுவாமிகளைத் தமது சீடனாக ஏற்றுக்கொண்ட பின் சிவஐக்கியம் ஆனார்.

## VI. திருப்போரூர் சிதம்பரசுவாமிகள்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளை முதலாகக் கொண்ட வீரசைவ குரு சந்தானமரபில் வந்தவர் ரெட்டி — சிதம்பரசுவாமிகள். மதுரைப் பகுதியினரான இவர் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். இவர் துறவு நெறியை மேற்கொள்ள முன்னர் சிதம்பரக் கவிராயர் எனப் பெயர் பெற்றிருந்தார். வீரசைவக் கோட்பாடுகளில் விருப்பங்கொண்ட இக்கவிராயர் விருத்தாசலத்தில் வீரசைவ மடம் அமைத்துச் சமயப் பணியாற்றிய ஸ்ரீ குமாரதேவரின் தொடர்பினால் சாந்தலிங்க சுவாமிகளின் சிறப்பியல்புகளைக் கேள்வியுற்றார். அதனால் குமாரதேவரின் துணையுடன் சாந்தலிங்கரிடம் சென்றார்.



கவிராயரின் பக்குவ நிலையை உணர்ந்த சாந்தலிங்கர் வீரசைவ நெறிமுறையிலான வீர விசேஷம், வீரநிராபரம் முதலிய தீட்சைகளை அவருக்கு வழங்கிச் சமாதிகூட்டுவித்தார். இதன் பிறகே சிதம்பரக் கவிராயர் சிதம்பர சுவாமிகள் என அழைக்கப்பட்டார்.

ஆன்மிக நெறியில் சிதம்பரசுவாமிகள் மன நிறைவு கொள்ளாமையை அறிந்த சாந்தலிங்கர் அவரைச் சீடனாக ஏற்றருளுமாறு குமாரதேவரிடம் பணித்தார். குமாரதேவர் அதற்கிசைந்து அருள் சுரந்தார்.

பழுத்த தமிழ்ப் புலமைபெற்ற சிதம்பரசுவாமிகள் வளமார் மதுரை மீனாட்சிஅம்மை மீது மீனாட்சி அம்மை அனுக்கிரகார்த்தக் கலிவெண்பா என்ற நூலை இயற்றியுள்ளார். ஆலய வழிபாட்டில் அக்கறை மிகுந்த சுவாமிகள் திருப்போரூரில் தங்கியிருந்து, அங்குள்ள முருகன் ஆலயத்துக்குப் பல பதிகங்கள் பாடியருளினார். சுவாமிகள் இயற்றிய திருப்போரூர்ச் சந்நிதி முறையில் செந்தமிழ்ச் சாறு சொட்டும். இவர் சாந்தலிங்கர் மீது வைத்த பேரன்பினால் அவர் ஆக்கிய நூல்களுக்கு அருமையான உரையெழுதிச் சிறப்பித்துள்ளார்.

சிதம்பரசுவாமிகளின் செந்தமிழ்சுவை நிரம்பிய திருப்போரூர் சந்நிதிமுறை படிக்கும் தொறும் இன்பம்

பயக்கும். மேலும் சுவாமிகள் தமது ஞான குரவரான குமாரதேவர் மீது பாடிய நெஞ்சுவிடு தூது முதலியன குரு பத்தியை வெளிப்படுத்தும்.

சோமகிரணப் பெருங்கருணை சுரந்த
முகங்கள் ஓராறும் சுருதி வழுத்தும்
பன்னிரண்டு தோளும் நீபத் தொடைமார்பும்
காமனிறச் செம்பட்டாடை மருங்குஞ்
சிறுசதங்கை கவித்த உபயத் திருத்தாளும்
கடையேன் துதிக்கப் பணியாயே
சேமநிதியே! சுரர்பதியே! தெய்வத் தருவே!
மலர்மருவே! செறிபூரணமே! ஆரணமே!
சிறியே னுயிருக் கோருயிரே!
பூமனறியாப் பிரணவத்தின் பொருளைப் பகரும்
பூங்கிளியே! போற்று மடியார்க் கோரருளே!
போரூர் முருகப் பெருமானே!.

— திருப்போரூர்ச் சந்நிதி முறை

---

சற்குமரதேவன் றருங்குவளைமாலை நெஞ்சே
யிற்பெறவே வாங்கிவா வின்று.

* * *

துதி

எவ்வுயிர்க்குந் தாயா யிருந்தின் பமுதளிக்குஞ்
செவ்விதரு சற்குமர தேவன்பா — லவ்வியந்திர்
நெஞ்சமே செங்குவளை நீண்மாலை வாங்கிவரச்
செஞ்சவே தூதாகிச் செல்.

— நெஞ்சுவிடு தூது

# வீரசைவக் கிரியை இயல்

## 1. பூர்வக் கிரியை

### பொது விளக்கம்

சைவத்தின் ஓர் அங்கமான வீரசைவத்தில் வைதிக சமயத்தவர் கடைப்பிடிக்கும் நெறிமுறைகள் முற்றாகப் பின்பற்றப்படுவதில்லை. வீரசைவர் சிவனைப் புறத்திலே வைத்துப் பூசிப்பதில் மனநிறைவு கொள்ளாது, அதன் குறியாகிய சிவலிங்கத்தைத் தமது அங்கத்தில் தாங்கி வழிபடுவதிற் பேரின்பம் காண்பர். இத்தகைய கோட்பாட்டை வளர்த்தவர்கள் ஐவர். அவர்களை மூலாசாரியர்கள் என்பர்.

அதனால் வீரசைவர் தமது சொந்தக் கிரியைகளின் போது மேற் குறிப்பிட்ட மூலாசாரியர் ஐவரையும் முன்னிலைப்படுத்தும் பாவனையாகப் பஞ்ச (ஐந்து) கும்பம் வைத்துச் செய்வது வழக்கம். அவ்வழக்கத்தைக் கொண்டே அக்கிரியை வீரசைவக் கிரியை என்று தீர்மானிக்கலாம்.

வீரசைவர்களின் பூர்வக் கிரியை, சமாதிக் கிரியைகளில் மேற் சொன்னவாறு பஞ்ச கும்பம் வைத்துச் செய்வது மரபு. இந்த நெறிமுறை இவ்வாறிருக்க, தாரண தீட்சை பெறாத சாமானிய வீரசைவர் விடயத்தில் மாற்று நடை முறையாக ஸ்நபன (ஒன்பது) கும்பம் வைத்துச் செய்யும் வழக்கமும் உண்டு.

இவற்றின் விவரங்கள் பின்னால் விவரிக்கப் பெற்றுள்ளன.

## ஐந்து கும்பம் வைத்தல்

வேதோக்தமாகச் செய்யும் கிரியைகளில் பரம் பொருளை முன்னிட்டுச் செய்யும் கருமங்களே உத்தம பலனைத் தருவனவாம். பரமேஸ்வரன் ஈசானம் முதல் சத்தியோசாதம் ஈறாகிய பஞ்ச முகங்களை உடையவரர்ய் இருந்து, ஐந்தொழில்களைச் செய் கின்றார். ஈசானாதி பஞ்ச முகங்களிலிருந்து தோன்றிய வடிவமே ஸ்ரீ இரேணுகாசாரியர் முதலிய மூல பஞ்சாசாரியர் ஆவர்.

அவர்கள் குருவடிவாய்த் தோன்றிக் குவலயத்தை அனுக்கிரகம் செய்தனர் என்பது வீரசைவக்கோட் பாடாகும். இதனால் வீரசைவர் தமது மரபுவழிச் சடங்குகளில் ஐந்து கும்பம் வைத்துக் கருமங் களை ஆற்றுதல் முறையாகும்.

வீரசைவ மரபினைப் பேணும் எல்லா வைப வங்களும் மற்றையோர் கடைப்பிடிக்கும் கிரியை முறைகளிலிருந்து சிறிது வேறுபட்டிருக்கும். வீர சைவர்களுக்குச் சிறப்பு விதி ஒன்று தனியாகப் பேணப்பட்டு வருகின்றது. திருமணம், தீக்ஷோப நயனம், அந்திம காலம் போன்றவற்றில் ஐந்து கும்பம் வைத்துக் கிரியைகள் செய்தல் வேண்டும்.

இலிங்காங்கி ஆகிய ஒவ்வொரு வீரசைவரும் இவ்விதியை மிக ஊக்கத்துடனும் பேரன்புடனும் கைக்கொண்டு பூசித்தற்கு உரியவர்களாகின்றனர்.



இறைவன் பக்குவான்மாக்களுக்குக் குருவடிவாய் வந்து அருள்புரிவார் என்பது சிவாகமத் துணிபு. இதனாலேயே இறைவன் குருந்தமரநீழலில் தெட்சணா மூர்த்தியாய் இருந்து சனகாதி நால்வருக்கு உப தேசம் செய்தார் எனப் புராணங்கள் கூறும். மேலும்,

'' குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந் தெனக் கருளி ''

எனக் குருவருளின் சிறப்பை விநாயகர் அகவலில் ஔவையார் குறிப்பிட்டுள்ளார். எனவே, குரு லிங்க சங்கம வழிபாட்டில் ஆழமான நம்பிக்கை கொண்ட வீரசைவர் பஞ்சாசாரியர்களைப் பணி வதில் வியப்பேதும் இல்லை.

அருவுருவத் திருமேனியாகிய சதாசிவன் ஐந்து முகம் கொண்டு ஐந்தொழில்களைச் செய்கின்றார். பஞ்ச முகங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொருதிசையை நோக்கி இருக்கும்.

ஈசான முகம் (கீழ் நோக்கியவாறு)—வட கிழக் கையும், தற்புருஷ முகம் — கிழக்கையும், அகோர முகம்—தெற்கையும், சத்தியோசாத முகம் —மேற்கை யும், வாமதேவமுகம்—வடக்கையும் நோக்கியுள்ளன. இம்முகங்களைக் குறிப்பதாகிய பஞ்ச கும்பங்கள் வைக்குமிடத்து, ஈசான கும்பத்தை நடுவணாகக் கொண்டு ஏனையவற்றை அவ்வத் திசைகளில் வைத்துக் கிரியை செய்தல் மரபு.

இவற்றுள் ஈசான முகமாக நின்று வழிபடு வோர் எல்லாப் பேறுகளும் பெறுவர்; சத்தி

யோசாத முகமாக நின்று வழிடுவோர் ஞானம் ஒன்றையே பெறுவர். வீரசைவர் சத்தி யோசாத முகத்துப் பூசையையே ஏற்றுக் கொள்வர்.

மேலே சொல்லிய பஞ்ச முகங்களில் இருந்து பரமேசுவர வடிவமே ஸ்ரீ இரேணுகாசாரியர் முதலிய பஞ்சாசாரியர்களாக யுகந்தோறும் அவதாரம் செய்து, பஞ்ச பீடங்களை நிறுவினர். இவர்கள் வீரசைவ தருமத்தை நிலை நாட்டினர் என்று ஸ்வாயம்பு, சுப்பிரபேதம், வாதுளம் ஈறாகிய சிவாகமங்கள் செப்புகின்றன.

பரமேசுவரனே ஆசாரியர்களாக அவதரிப்பதனால் ஆசாரிய பூசையே சிவபூசையாகக் கொள்ளப்படுகிறது. இதனால் முக்கியமான காலங்களில் வீரசைவக் கிரியை செய்யும் சிவாசாரியர்கள் தமது ஆசாரியர்களை வழிபடும் முகமாக ஐந்து கும்பம் வைக்கின்றனர்.

இந்த ஐந்து கும்பங்களிலே நடுவண் — ஸ்ரீஇரேணுகாசிரியர், கிழக்கில்—மருளாராத்திரியர் (தாருகர்), தெற்கில் — ஏகோராமராத்திரியர், மேற்கில்—விஸ்வாராத்திரியர், வடக்கில்—பண்டிதாராத்திரியர் ஆகிய மூலாசாரியர்களை அவற்றில் ஆவாகனம் செய்வதாகப் பாவனை செய்வர்.

பரசிவ வடிவமான பரமாசாரியர்களை வேத மந்திரங்களினால் முதலில் ஆவாகனம் செய்தபின்பு பக்தியுடன் பூசித்து ஆசாரிய கிருபையைப் பெறுவர்.

இந்த முறைமை இப்படியிருக்க, சிலர் பல கும்பங்கள் வைத்து அலங்காரமாகக் கிரியைகள் செய்வதும் வழக்கிற் புகுந்து கொண்டது.

# 1. சிவதீட்சை

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் திருநீறே.

— திருஞானசம்பந்தர்

''மனிதனை விலங்கில் நின்றும் பிரிப்பது சமயம்'' என்று கூறுவார் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள். ஆன்மாவின் அறியாமையைப் போக்கி, ஆண்டவன்பால் மனதை ஈடுபடச் செய்வதே சமயம். எத்தகைய பட்டம் பதவியை ஒருவர் பெற்றிருந்தாலும் அவருக்குச் சமய அறிவு இல்லாவிடின் அத்தகைய பதவியினாலும் புகழினாலும் யாதொரு பயனும் இல்லை. ஆன்ம ஈடேற்றத்துக்கு உதவாத கல்வியும் அறிவும் மனிதனிடத்தில் அசுரத் தன்மையையே வளர்க்கும். எனவே, மாநிலத்திற் பிறந்த மானிடர் அனைவரும் தம்மைச் சமய வாழ்வில் ஈடுபடுத்துதல் அவசியமாகின்றது.

இந்த வகையிலே வீரசைவ பரம்பரையிற் பிறந்த ஒருவர் தாம் சார்ந்த சமயக் கருத்துக்களை ஓரளவேனும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். சமய அறிவு மேன்னிலை எய்தும் பொழுதே பண்பும் பணிவும் தோன்றும். ''பணியுமாம் என்றும் பெருமை'' என்பது பொய்யாமொழி. சமய அறிவு உள்ளத்திற் பதியும் பொழுதே சமய அனுட்டானமும் தானாக வளர்கின்றது.

ஆகவே சமய அறிவை ஆசிரியரிடம் இருந்தோ சமய குருவிடம் இருந்தோ இளமையிற் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். ''இளமையிற் கல்வி சிலையில் எழுத்து'' என்பது ஆன்றோர் வாக்கு. இதற்கமைய வீரசைவக் கோட்பாடுகளைக் கற்றுக் கொண்டவர் அம்மதத்திற்குரிய இலிங்க தாரணம் செய்து கொள்ளல் வேண்டற்பாலது. வீரசைவ மரபைச் சார்ந்த ஒருவர் சிவலிங்க தாரணம் செய்யும் வரை அவரைச் சாமானிய வீரசைவர் என்றே கூறுவர்.

வீரசைவர் தமது மரபுக்குரிய முறையில் முதலிலே சமயப் பிரவேசம் செய்தல் வேண்டும். சமயப் பிரவேசம் செய்கையில் ஒருவருக்கு முதன் முறை செய்யப்படும் தீட்சை; சிவதீட்சை அல்லது சமயதீட்சை எனப்படும். வீரசைவர் இதனை வீரசாமானியம் என்பர். அதனைத் தொடர்ந்து வீரவிசேடம், வீரநிராபரம் என இரண்டும் சேர்த்துமூவகை முக்கிய தீட்சைகள் வீரசைவத்தில் உண்டு.

இவற்றுள், வீரவிசேட தீட்சையாவது இலிங்க தாரணம் செய்து, பிராணலிங்க பூசையில் ஈடுபடுவோருக்குச் செய்யப் பெறுவது எனவும், வீரநிராபரம் அல்லது வீரநிராபாரமாவது பற்றுக்களைத் துறந்து, சிவசீவ ஐக்கியத்தில் மனதைச் செலுத்தித் துறவு நெறியில் நிற்பவர்களுக்குச் செய்யப் பெறுவது எனவும் சுருங்கச் சொல்லலாம்.

தீக்ஷை என்ற வட சொல் [தீ + க்ஷா எனப் பிரித்து (தீ = ஞானம், க்ஷா = கெடுப்பது) பொருள் கூறின்] ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தைக் கெடுப்பது எனப் பொருள்படும்.



சிவதீட்சை அளிக்கும் பொழுது குருவானவர் சீடனுக்கு நயனம், பரிசம், மானசம், வாசகம், சாத்திரம், யோகம் ஆகிய அறுவகைத் தீட்சைகளைப் படிமுறையிற் செய்வது வழக்கம்.

சிவதீட்சைக் கிரியையில் வீரசைவக் குருவானவர் முதலில் புண்ணியாக வாசனம் ஆகிய சங்கற்பம், விக்னேஸ்வர பூசை, பஞ்சகவ்விய பூசை, வருணகும்ப பூசை என்பவற்றைச் செய்து, சீடனை (நயனம், பரிசம் மூலம்) தூய்மைப் படுத்துவார். பின்பு பஞ்சகும்பபூசையும் அக்கினி காரியமும் (ஔத்திரியும்) செய்து, அவற்றின் முன்னிலையிற் சாமானிய வீரசைவருக்குத் திரிபுண்டரம் தரித்தலாகிய கிரியை செய்யப்படும். பின் பிரணவத்துடன் கூடிய நகாராதி பஞ்சாட்சர மந்திரோபதேசமும் (வாசக தீட்சை) செய்து வைப்பார். மேலும் சைவ நெறியின்படி விநாயகர், உமை, முருகன், சூரியன் ஆகிய தெய்வங்களின் மூல மந்திரங்களும் உபதேசிக்கப்படலாம்.

மேற்குறித்த நிகழ்வில் வைக்கப் பெறும் ஐந்து கும்பங்கள் இரேணுகாதி பஞ்சாசாரியர்களைக் குறிப்பனவாகும். எரியோம்பலில் சீடனுடைய மும்மலங்களை நாசம் செய்யும் பாவனையில் அக்கினியிற் செய்யப்படும் பூரணாகுதியுடன் இச்சமய தீட்சை நிறைவுறும்.

சிவதீட்சை (வீரசாமானியம்) நிறைவுற்றதும், குருவானவர் சீடரைப் பார்த்து நாள் தோறும் செய்யும் அனுட்டான (சாத்திர தீட்சை) ஒழுங்கு முறைகளை

உபதேசிப்பார். அத்துடன் தீட்சையின் மகிமையையும் தீட்சை பெற்றவர் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளையும் விளக்குவார். சீடர் அவ்வுபதேச மொழிகளைப் பொன்னே போல் போற்றி நடப்பது கடமையாகும்.

ஒருவர் சிவதீட்சை பெறுவதனால் மந்திரமும் தந்திரமும் மருந்துமான திருநீற்றை அணிவதுடன் பவக் கடலை நீந்தத் தெப்பமாய் உதவும் ஐந்தெழுத்து ஓதி உய்யவும் ஏதுவாகின்றது.

வெந்தநீ றருங்கலம் விரதி கட் கெல்லாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலம் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே.

— திருநாவுக்கரசர்

* * *

நானேயோ தவஞ் செய்தேன்
    சிவாயநம எனப் பெற்றேன்
தேனாய் இன் அமுதமுமாய்த்
    தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனதுள்ளம்
    புகுந்தடியேற்கு அருள் செய்தான்
ஊன் ஆரும் உயிர்வாழ்க்கை
    ஒறுத்தன்றே வெறுத்திடவே.

— மாணிக்கவாசகர்

---

## ௨. சிவலிங்க தாரணம்

சுந்தரற்குப் பெண்கொடுத்த சோதிலிங்கம்
துரைசுவாமி தனையீன்ற சொக்கலிங்கம்
கந்தரத்தில் கடுநஞ்சை வைத்தலிங்கம்
கருதுவார் தங்கருத்தில் வாழும் லிங்கம்
அந்தரத்தில் மால்விடைமேல் வந்தலிங்கம்
அழுதபிள்ளை தனக்குப்பால் அளித்தலிங்கம்
இந்தவளஞ் சேரிலங்கை வந்தலிங்கம்
எனையாண்ட குருலிங்கம் என்றுங்காப்பே.

— சிவயோக சுவாமிகள்

வீரசைவ நெறியில் சிவலிங்க தாரணம் செய்தல் ஒரு முக்கிய செயல்முறையாகும். இம்முறைக்கு அமைய அணிந்த இலிங்கத்தை இட்டலிங்கம் என்பர். சாமானிய வீரசைவர் சிவதீட்சை பெற்ற பின்னரே இலிங்க தாரணம் செய்தற்கு அருகராவர். அப்படியான ஒருவர் வீரசைவக் குருவை அடைந்து தமது விருப்பத்தைத் தெரிவிப்பார். அவ்வேண்டுகோளுக்கு உடன்பட்ட குருவானவர் அதற்கு வேண்டிய சாமக்கிரியைகளை [பொருள்களை]த்தேடுவித்துக் கிரியா மண்டபம் அமைப்பிப்பார்.

ஆங்கு புண்ணியாகவாசனம், பஞ்சகும்ப பூசை, உருத்திர கும்ப பூசை, அக்கினி காரியம் ஆகிய கிரியைகள் முதலில் இடம்பெறும். அடுத்து தீட்சா குரு அருவுருவ வடிவாகிய சிவலிங்கம் ஒன்றை எடுத்து அட்டபந்தனஞ் செய்வார். பின் கரபூசை செய்யப்பெற்ற தமது இடது அங்கையில் அதனை வைப்பார். அங்கையில் எழுந்தருளச் செய்த அச்

சிவலிங்கப் பெருமானுக்கு ஆசன பூசை, உருத்திரா பிடேகம், ஆவாகனாதிகள், நிவேதனம், அர்ச்சனை, தீபோபசாரங்கள் ஆகியவற்றைச் செய்வார்.

**தாரணம் செய்து வைத்தல் :**

இலிங்கதாரணம் செய்து வைக்கும் வீரசைவக் குரு வடக்கு முகமாக இருந்துகொண்டு சீடனைத் தன்முகமாக இருக்க வைப்பார். பின்பு சீடனுடைய உடம்பில் மந்திர நியாசம் செய்வார். அதனைத் தொடர்ந்து மலரால் இதய தாமரையில் இருக்கும் பிராண, பாவனா லிங்கங்களை மந்திர பூர்வமாக எடுத்துத் தனது அங்கையில் உள்ள இட்டலிங்கத்திற் பதியும்படி [நியோகம்] செய்து, சிவனுக்கும் சீடனுக் குமான தொடர்பை மானசீகமாக ஏற்படுத்துவார். இது சிவ, சீவ [பிராண] கலை இணைப்பாகும்.

இந்நிலையில் இந்த இட்டலிங்கமானது * இஷ்ட, * பிராண, * பாவனா லிங்கங்களின் சேர்க்கையாய் [சையோகம்] அமைகிறது. அவ்வாறு அமையப் பெற்ற இட்டலிங்கத்தைச் சீடனுக்குத் தாரணம் செய்யக் குரு தயாராகுவார். அப்பொழுது குருவான வர் சீடனைப் பார்த்து —

* இஷ்டலிங்கம் :

தேர்ந்து எடுத்த சிவலிங்கத்தை அபிஷேகித்த பின்னர் அதில் சிவகலையைக் கொண்டு வந்து இணைக்க வேண்டும். பின் அந்த லிங்கத்தில் சீடனுடைய (பிரா ணனில்) சீவகலையைக் கொண்டு வந்து இணைக்க வேண்டும். ஆகவே இட்டலிங்கம் என்பது சீடனிடத் தில் உள்ள சிவகலையும் சீவகலையும் இணைந்த ஒன்று எனலாம்.



"இவ்விலிங்கம் உன்னுடைய பிராணனே ஆகும். ஆதலின் உனது உயிர் உள்ளவரையும் நீ அனுபவிப்பன எல்லாவற்றையும் இந்த இட்டலிங்கத்துக்கு அர்ப்பிக்க [கொடுக்க] வேண்டும். இதனை ஒரு பொழுதும் இழக்கக் கூடாது. இழப்பின், உயிர்த் தியாகம் செய்ய வேண்டும். அன்றி அதனைத் தேடி எடுக்க முயற்சித்து, எடுக்கும் வரை மந்திர [நாம] செபம் செய்து கொண்டிருந்து, கண்டெடுக்கப் பெற்றபின், முறைப்படி தூய்மைப்படுத்திய இலிங்கத்தைப் பூசை செய்து அணிய வேண்டும்."

என அறிவுரை கூறிச் சீடனுடைய கரங்களில் சிவலிங்கத்தை அளிப்பார்.

கொண்ட குறியும் குலவரை புச்சியும்
அண்டரும் அண்டத் தமரரும் ஆதியும்
எண்டிசை யோரும் வந்தென் கைத்தலத்தினுள்
உண்டெனில் நாமினி உய்ந்தொழிந் தோமே.

— திருமந்திரம்

* பிராண லிங்கம் :

சிவ, சீவ கலைகளின் இணைப்பைப் பிராணனில் (உயிரில்) இணைத்த பின்னர், சீடனுடைய உயிரும் அந்த உயிரில் தங்கி இருக்கிற சிவகலையும் சேர்ந்த இணைப்பே பிராணலிங்கம்.

* பாவ லிங்கம் :

இட்டலிங்கத்தைச் சீடனிடம் கொடுக்கும் போது குருவானவர் உணர்த்தியவாறு சீடன் மனத்தில் பாவனை செய்து பார்ப்பது பாவலிங்கம்

இட்டலிங்க பூசை தூல தேகத்துடனான புறப் பூசையாகும். மற்றைய இரண்டும் சூக்கும தேகத்தில் மானசிகமான பிராண லிங்க பூசையும் காரண தேகத்தில் சீவன் சிவனுடன் இணைவதான பாவலிங்க பூசையும் அகப் பூசைகளாம்.

சீடன் அதனைப் பெற்றுத் தனது கண்களில் ஒற்றிக்கொண்டு, நெஞ்சிற் பதித்துக் கழுத்திலுள்ள நூலில் பந்தனஞ்செய்வார். பந்தனம் செய்த இட்டலிங்கத்தைத் தலை, கண்டம், மார்பு, நாபி [கொப்பூழ்], வலப்புயம் ஆகிய இடங்களுள் ஒன்றில் அணிந்து கொள்வார். பந்தனம் செய்யும் நூல் சிவ, சிவனுக்குள்ள இணைப்பைக் குறிப்பிடும். இந்த முறையில் அணிந்து கொள்வதே இலிங்க தாரணம் ஆகும்.

**நித்திய சிவபூசை:**

இலிங்கதாரணம் செய்யப்பெற்றவர் நித்திய சிவபூசையில் ஆசாரசீலராய் வடக்கு அல்லது கிழக்கு நோக்கி இருந்து, முதலாவதாக அநுட்டானஞ் செய்தல் வேண்டும். அதனைத் தொடர்ந்து இடது கையில் பஞ்சப்பிரம்ம மந்திரங்களைப் பெருவிரல் ஆதியாக ஐந்து விரல்களிலும் பதித்து நடுவே சிவசக்தி மந்திரத்தை நியசித்தல் வேண்டும். பின் உள்ளங்கையில் பிரணவம் எழுதி, ஆசனம் கற்பித்தலாகிய கரபூசை செய்யப்படும். அதனைத் தொடர்ந்து மூலமந்திரத்தைச் சொல்லிக் கொண்டு இட்டலிங்கப் பெருமானைப் பந்தனத்திலிருந்து எடுத்து முன்னர் கற்பித்த ஆசனமாகிய அங்கையில் கோமுகை [கோமுகி] ஈசானத்தை நோக்கியவாறு வைத்து நீராட்டுதல் வேண்டும்.

அதனைத் தொடர்ந்து இலிங்காயதர் தனக்கு இடதுபக்கம் நோக்கி இட்டலிங்கத்தின் கோமுகை அமையவைத்த கையை நெஞ்சுடன் அணைத்துக் கொண்டு விபூதி, சந்தனம், அட்சதை, மலர் ஆகிய



வற்றைச் சார்த்தி நிவேதனம் அளித்து அர்ச்சனை செய்து தூபாதி உபசாரங்களோடு தோத்திரங்களும் செய்தல் வேண்டும்.

ஈற்றில் இலிங்காயதர் நகாராதி பஞ்சாட்சர செபம் செய்து கொண்டு தனது இரு கண்களுக்கு நேரே இட்டலிங்கப் பெருமானைப் பார்த்தபடி தியானித்தல் வேண்டும். பின் அப்பார்வையில் நின்றும் கையைக் கீழே பதித்து, நெஞ்சுடன் அணைத்தவாறு இதய தாமரையில் சிவலிங்கப்பெருமானை ஒடுக்கியதாகப் பாவனை செய்தல் வேண்டும். பின்னர் சிறிதளவு நீர் எடுத்து இட்டலிங்கத்தில் விட்டுக் கீழேஒழுகும் நீரை வலதுகையில் ஏந்திப் பாதோதகமாக அருந்துதல் வேண்டும். பின்பு இட்டலிங்கத்தை முன்பிருந்தவாறு பந்தனத்தில் சேர்த்துக் கண்ணில் ஒற்றிக் கொள்ள வேண்டும். கடைசியிலே நந்தி பூசையுடன் நித்திய சிவபூசையை நிறைவுசெய்து கொள்வதே முறைமை. நிறைவுறும் போது —

நிதியாய் நினைத்த பேர்க்கு நினைத்தது கொடுக்கும் லிங்கம்
பாதிமா மதியே சூடும் பராபரமான லிங்கம்
வேதியன் போற்றும் லிங்கம் மேருவாய் வளர்ந்த லிங்கம்
ஆதியாய் நின்ற லிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்.

— ஒரு பழையபாடல்

எனப் பாடிப் பரவுதல் பண்டையோர் மரபு.

---

# 3. திருமணம்

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

* * *

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

— திருவள்ளுவர்

புதுமண வாழ்விற் புகும் ஆண், பெண் இருபாலாரும் தமது தனி வாழ்க்கையில் அனுபவித்த இன்ப, துன்பங்கள் திருமண வாழ்க்கையிலே மாற்றமடைவதைக் காண்பர். இல்லற வாழ்வில் ஒருவருக்கு ஒருவர் துணை நின்று வாழவேண்டும். திருமணத்தில் இணைந்து கொண்ட ஆண், பெண் இருவரின் வேறுபட்ட மனங்கள், ஒன்று மற்றொன்றில் அன்பினால் கரைந்து விடுகிறது; சுயநலம் மறைந்து, தியாகம் பிறக்கிறது. கணவன், மனைவி இருவரும் ஒருவர் மற்றவருக்காக விட்டுக் கொடுத்து, மனம் ஒன்றுபடுகிறது. துணிவும் தியாகமும் தயையும் ஓர் உருப்பெறுகின்றன. விருந்தினர், சுற்றம், நலிந்தோர் முதலானோரின் நலனிலே மனம் நாட்டம் கொள்கின்றது. பிறர் மீது கொண்ட அன்பினால் இதயம் கனிந்து இன்முகமும் இன்சொல்லும் வெளிப்படுகின்றன. அவை இல்லறத்தை நல்லறமாக்க உதவுகின்றன.

தனி வாழ்விற் கண்ட இன்ப துன்பம் இரண்டும் இல்வாழ்விற் பகிரப்படுகின்றன. இதனால் இன்பம் இருமடங்காகவும் துன்பம் அரைப் பங்காகவும் மாற்றம் அடைகின்றன. இத்தகைய சிறப்பினை நல்கும் திருமண வாழ்வு இன்பம் பெருக்கி இருள் கடிகின்றது. தெய்வம், குரு, சான்றோர்,



சுற்றம் ஆகிய அனைவரது நல்லாசியும் திருமண வாழ்வுக்கு உதவ வேண்டும் என்பதனாற் போலும் திருமணம் சமயச் சடங்குடன் இணைந்துவிட்டது.

வீரசைவர்களுடைய திருமணத்தில் பஞ்ச கும்பங்களும் சிவம் வர்த்தனி கும்பங்களும், சோம (சந்திர) கும்பமும், அரசாணி கும்பங்களும் (நான்கு) வைத்தல் முறையாகும்.

திருமணக் கிரியையில் முதலாவதாகப் புண்ணியாகவாசனம் இடம் பெறும். அதனைத் தொடர்ந்து மணமக்கள் எவ்வித தீமைகளுக்கும் உள்ளாகாமல் இருப்பதற்குப் பாதுகாப்பின் அடையாளமாகக் காப்புக் கட்டுதல் நிகழும்.

பின் மணமக்கள் பல்லாண்டு வாழவேண்டும் என்ற குறிப்பில் அங்குரார்ப்பணமாகிய பாலிகை போடுதல் நடைபெற்றுச் சோமகும்ப பூசையும் இடம் பெறும். பாலிகை போடுதலாவது புதுச் சட்டியில் தூய்மையான பசு மாட்டடி மண்ணை நிரப்பி, அதனைப் பன்னிரண்டு கோட்டங்கள் (சதுரங்கள்) ஆக்கித் துவாதச ஆதித்தர்களை (பன்னிரு சூரியர்களை) நியசித்து (பதித்து) நடுவே சோமனை (சந்திரனை)த் தியானித்துப் பாலில் ஊறிய நவதானியங்களை மூன்று சுமங்கலிகளைக் கொண்டு இடுதல் வேண்டும்.

அதனைத் தொடர்ந்து சிவம் வர்த்தனி கும்ப பூசையும் பஞ்ச கும்ப பூசையும் நடைபெறும். அடுத்து அக்கினி வழிபாடாகிய ஓமக் கிரியை செய்யப்படும். இலிங்காயதருக்கு இவ்வழிபாடு செய்யப்படுவதில்லை.

பின்னர் கன்னிகாதானமும் திருமாங்கல்ய பூசையாகிய இலக்குமி பூசையும் நடைபெறும். கன்னிகாதான நிகழ்வில் கோத்திரம் கூறும்பொழுது

''வீரகோத்திரம்'' என்று குறிப்பிட்டுத் தொடங்குவதே வழமை. இந்நிகழ்வில் மணமக்களை உமா—மகேஸ்வரர் ஆகப் பெண்ணின் பெற்றோர் பாவித்துப் பூசிப்பர். இலிங்காயதருக்குச் செய்யப்படும் கிரியையில் சிவலிங்க பூசையும் இடம் பெறும்.

அடுத்து மணமக்கள் உடை கொடுத்து வாங்கல் செய்வர். பின்னர் திருமாங்கல்ய தாரணமாகிய தாலிகட்டும் வைபவம் இடம் பெறும். தொடர்ந்து மாலை மாற்றுதல், பால் பழம் அருந்துதல், அம்மி மிதித்தல், அரசாணி வலம் வருதல், அருந்ததி பார்த்தல் என்பன நடந்து, பூரணாகுதி செய்யப்படும். பின் மணமக்களை வாழ்த்துதலும் குரு உபசாரமும் நிகழ்வதுடன் திருமணக் கிரியை நிறைவெய்தும்.

திருமண வாழ்வில் தலைப்பட்ட தலைவன் தலைவியர் தெய்வ அனுக்கிரகத்தை வேண்டி நிற்பது சமயப் பற்றுள்ளவர்களின் சால்பாகும்.

**மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலைக்**
**கண்ணில் நல்லஃ துறுங் கழுமல வளநகர்ப்**
**பெண்ணில் நல்லா ளொடும் பெருந்தகை இருந்ததே.**

நல்ல குடும்பத்துக்கு அழகு அவ்வீட்டின் செயற்பாடுகள் யாவும் ஒழுங்காக நடைபெறுவதில் தங்கியுள்ளது. அவ்வாறான ஒழுங்கைக் கடைப்பிடித்தல் ஒரு தலைவனாலேயே இயலும். அவ்வாறே இல்லத்தில் மகிழ்ச்சியும் நின்மதியும் நிலவுவதற்கு அவ்வில்லத்தின் தலைவி நற்குணம் உள்ளவராய் இருத்தல் வேண்டும். ஆகவே இல்லற வாழ்வில் தலைவன், தலைவி இருவரும் ஒத்த மனமும் ஒத்த குணமும் ஒருவருக்கொருவர் புரிந்துணர்வும் உடையவராய் இருத்தல் தமிழர் சால்பாகும்.

---

## 11. சமாதிக் கிரியை

சமாதி என்னும் சொல் இருவகையான பொருளை உள்ளடக்கியது. ஒன்று ஞானசமாதி; மற்றையது கிரியா சமாதி. இவற்றுள், ஞான சமாதி எனக் குறிப்பிடுவது மனத்தை ஒரு வழிப்படுத்திக் கடவுளிடத்தில் ஈடுபடுத்தலாகும். ''என்னை மறந்திருந்தேன் இறந்தே விட்டது இவ்வுடம்பே'' என்ற பக்குவ நிலை எய்துவது ஞான சமாதியாகும். இச் சமாதி இயமம் முதல் சமாதி ஈறாகிய எட்டுப் படி முறைகளைக் கொண்டது.

கிரியா சமாதி என்பது ஆன்மா நீங்கிய உடலைத் தூய்மைப் படுத்திச் சிவரூபம் ஆக்கிய பின்னர் செய்யப்படும் சடங்கையும் அதனைத் தொடர்ந்து மண்ணிற் கல்லறை அமைத்து, அவ்வுடலை முறைப்படி சமாதி இருத்திப் பூமியிற் புதைப்பதையுங் குறிக்கும். ஈண்டு கிரியா சமாதி பற்றிக் கவனிப்போம்.

சைவத் தமிழ்ப் பாரம்பரியத்தில் ஒருவர் உயிர் நீத்தலை இயற்கை எய்தல் அல்லது சிவகதி எனக் கூறுதல் மங்கல வழக்கு. அந்த வகையில் வீரசைவ இயக்கத்தைச் சேர்ந்த ஒருவர் இயற்கை எய்துவதைச் **சிவலிங்க ஐக்கிய மாதல்** என்பர். வீரசைவர் சிவஐக்கியமான பின் அவருடைய ஆன்ம நன்மைக்காக அவரின் உரிமையாளரால் (கர்த்தாவால்) செய்யப்படும் அந்திமக் கிரியை, சமாதிக் கிரியை ஆதலின், அதனை அபரக் கிரியை (உயிர் நீத்தபின் செய்வதாகிய கிரியை) என்று கூறாது **சமாதிக் கிரியை** என்று கூறுவர்.

வீரசைவத்தைச் சார்ந்த ஒருவர் சிவலிங்க ஐக்கியம் ஆனதும், அவரது உடலைச் சுற்றத்தார் தூய்மைப்படுத்துவர். பின்பு அவ்வுடலைச் சிவமாகப்பாவித்துச் சாய்வுக்கதிரையிலே பத்மாசனத்தில் இருத்துவர். அதன்மேல் அவ்வுடலுக்கு ஆடை உடுத்து, திருநீறு, உருத்திராக்கம் என்பவற்றை அணிந்து மலரினால் அலங்கரித்துச் சிவக்கோலம் ஆக்குவர். பின்பு அவ்வுருவத்தின் முன் கும்பம் ஒன்று வைத்து, குத்து விளக்கு ஏற்றித் திருமுறை ஓதப்படும்.

அதன் பின் வீரசைவக் குருவை வரித்து (வரவழைத்து) சிவலிங்க ஐக்கியமானவரின் உடலுக்குரிய சமாதிக் கிரியையைச் செய்துதவும்படி உரிமையாளர் வேண்டிக் கொள்வார். அதற்கமைய அலங்கரிக்கப் பெற்ற கிரியா மண்டபத்திலே பஞ்சாசாரிய கும்பங்களும் சிவம் வர்த்தனி கும்பங்களும் வைக்கப்படும்.

சிவஐக்கியமானவர் சாமானிய வீரசைவராயின், அவருக்கான கிரியையில் பஞ்சாசாரிய (ஐந்து) கும்பங்களுக்குப் பதிலாக சிவனை நடுவணாகக் கொண்டு திக்குப் பாலகர் எண்மரைச் சுட்டுவதான ஸ்நபன (ஒன்பது) கும்பங்களை வைத்துப் பூசித்துக் கிரியை செய்வதும் உண்டு. அதற்கான விவரம் கேட்குமிடத்து, அது அவ்வூர்ப் பாரம்பரியம் எனக் கூறுப்படுகிறது, எது எப்படி இருப்பினும், நடைபெறும் கிரியை சமாதிக் கிரியை என்பதைப் பிரித்தறியும் வகையிற் பஞ்ச கும்பம் வைத்துச் செய்வதே முறையாகும்.



கும்பத் தாபனம் செய்த பின்னர் ஆசாரியர் கர்த்தாவுக்குச் சங்கற்பம் செய்து, பஞ்சகவ்வியம் கொடுத்து, அவரைத் தூய்மைப்படுத்திய பின், * இடது தோளில் பூணூல் அணிவிப்பார். பிறகு புண்ணியாகவாசனம் முடித்து, சிவம் வர்த்தனி பூசை செய்து, சமாதியாய் இருக்கும் உடலையும் கிரியா மண்டபத்திலுள்ள கும்பங்களையும் தொடர்புறுத்துவதாகிய நாடிசந்தானம் (நூலிட்டுத் தொடர்புறுத்தல்) செய்யப்படும்.

சிவைக்கியமானவர் சாமானிய வீரசைவராயின், முதலில் க்ஷணிக லிங்கமாகிய உருத்திராக்கம் ஒன்றை எடுத்து, அதற்கு அபிடேகாதிகள், அருச்சனைகள் செய்யப்படும். பின்பு அவ்விலிங்கத்தை நாடிசந்தான வழியே ஆசாரியர் கொண்டு சென்று சமாதியாய் வைக்கப் பெற்ற உடலருகே நின்று மந்திர நியாசங்களால் உடலைத் தூய்மைப் படுத்திய பின்னர், அதற்கு இலிங்கதாரணம் செய்து அதனைச் சிவரூபம் ஆக்குவார்.

உடலைச் சிவக்கோலம் ஆக்கிய பின், ஆசாரியர் கிரியா மண்டபம் மீண்டு, கும்ப பூசையும் ஓமாக்கினி வளர்த்தலும் ஆகிய க்ரியைகளை நடத்துவார். மந்திரங்களினால் சிவரூபம் ஆக்கிய உடலை ஊர் வழமைப்படி உரிமையாளரைக் கொண்டு நீராட்டுவிக்கப்படும். நீராட்டு இறுதியில் கிரியா மண்டபத்திலுள்ள பஞ்ச கும்ப அல்லது ஸ்நபன கும்ப நீரினால் அபிடேகம் செய்யப்படும். பின் ஆடை முதலியவற்றினால் அலங்கரித்த உடலைக் கிரியா மண்டபத்துள் கொண்டு வந்து வைப்பர்.

* வீரசைவ சமாதிக் கிரியை பூர்வக் கிரியையாகக் கொள்வது வீரசைவ மரபு.

உடலை நீராட்டுதற்கு முன் மஞ்சள், அறுகு முதலியவற்றைப் பொடியாக்குதற்கு உரலிலிட்டு இடிக்கப்படும். இந்நிகழ்வு ஆன்மாவைப் பிடித்துள்ள ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல நாசத்தைக் குறிக்கும். திருப்பொற்சுண்ணம் இடித்தல் ஆகிய சூர்ணோற்சவம், உடலை நீராட்டிய பின் செய்யும் வழக்கமும் உண்டு. இது இலிங்கதாரண நிட்சை பெற்றோருக்கு எச்சந்தர்ப்பத்திலும் * வேண்டியதில்லை.

இதற்கிடையில், சிவலிங்க ஐக்கியமானவரின் உடலை நீராட்டுதற்கு வெளியே எடுத்துச் சென்றதும், புற்று மண்ணிற் செய்த இலிங்கம் ஒன்றைக் கொண்டுவந்து அவ்விடத்தில் வைக்கப்படும். பின்னர், அன்றிலிருந்து மூன்று நாட்கள் வரை அவ்விலிங்கத்துக்குப் பூசை, வழிபாடுகள் செய்தல் முறையாகும்.

சமாதிக் கிரியைக்காகக் கிரியா மண்டபத்துக்கு உடலைக் கொண்டு வந்து வைத்த பின்னர், அவ்வுடலுக்குச் செய்ய வேண்டிய கிரியைகள் இடம் பெறும்.

பின்பு மலர்களினாலும் வண்ணக் கொடிகளினாலும் அலங்கரிக்கப்பட்ட தேரின் உள்ளே பாதுகாப்பாக உடலை இருத்தி வைத்து, முன்னரே வெட்டி ஆயத்தம் செய்யப் பெற்ற சமாதிக் குழியருகே கொண்டு செல்லும் பொழுது, அதன் கூடவே குருவினால் உரிமையாளரிடம் கொடுக்கப் பெற்ற உருத்திர கும்பமும் எடுத்து வரப்படும்.

* இதுபற்றிய விவரம் ''திருப்பொற் சுண்ணம் இடித்தல்.'' என்ற தலைப்பின் கீழ் முன்னர் விவரிக்கப்பட்டுள்ளது.



நாலடிச் சதுரமும் உள்ளே குடையப்பட்டதுமான குழி அருகிற் சென்றதும், அதனை மும்முறை வலம் வந்த பின், தேர் கீழே இறக்கி வைக்கப்படும். பிறகு குழியின் அடியில் உப்பினைப் பரப்பிவிட்டு, விபூதி, நெல் மற்றும் தானியங்களும் ஒன்றன் மேல் ஒன்றாக இடப்படும். அதன் பின்னர் சடலத்தை இருத்திய நிலையில் சமானிய வீரசைவராயின், வடக்கு முகமாகவும், இலிங்கதாரியாயின் கிழக்கு முகமாகவும் சமாதி வைக்க வேண்டும்.

அதனைத் தொடர்ந்து கர்த்தாவானவர் சடலத்தை மூடுவதற்கு அடையாளமாக முதலில் ஒரு பிடிமண் எடுத்துக் குழியினுள் போட்டபின், உப்பு முதலியவற்றுடன் பொடியாக்கிய செங்கற்களையும் ஒன்றன் மேல் ஒன்றாகப் போட்டுக் குழி மூடப்படும். பின்பு அங்கு கொண்டு சென்ற உருத்திர கும்ப நீரினால் சடலத்தின் உச்சியில் அபிடேகித்து, சிவார்ச்சனையும் திருமுறை ஓதலும் இடம் பெறும். குழி, மண்ணினால் நிரப்பப்பட்ட பின், சிரசிற்கு மேல் தடி ஒன்று நடப்படும். அதன் பின் சிவ ஐக்கியமானவரின் ஆன்மா நற்பேறெய்தும் பொருட்டுப் பிரார்த்தனையாகக் குருவும் கர்த்தாவும் வீரசைவபரமான இட்டலிங்கப் பெருமானை வேண்டுதல் செய்வதுடன் சமாதிக் கிரியை நிறைவெய்தும்.

'' அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே; விழியம் பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மி விம்மி இரு
கைத்தலம் மேல் வைத்து அழும்மைந்தரும் சுடுகாடுமட்டே;
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே.''

— பட்டினத்தார்.

# சமாதி வைத்தல்

சமாதி வைத்தல் என்பது பஞ்ச பூதங்களினாலான மனித உடல் உயிர் நீங்கியபின், பஞ்ச பூதங்களும் தன்னகத்தே கொண்ட பூகற்பத்தில் சமயாசாரப்படி இருந்த கோலத்தில் நல்லடக்கம் செய்வதாகும். உயிர் நீத்த உடலை மண்ணில் புதைத்தல் நெடுங்கால வழக்கம். இதற்கான வரலாற்றுச் சான்றுகளும் உண்டு.

முன்னாளில் அரசர்கள், பிரபுக்கள் போன்றோர் உயிர் நீத்தபின் அவர்களின் உடலைப் பாதுகாத்துப் பேணும் பழக்கம் இருந்து வந்தது. அம்மாதிரியான பழக்கம் எகிப்திய நாட்டில் கி. மு. 4000 ஆண்டுகளுக்கு முன்பே இருந்துள்ளது. உயிர் நீத்த அரசர்களின் உடலைத் தைலத்தில் இட்டுப் பாதுகாத்தபின்னர் அவற்றைப் புதைகுழியில் நல்லடக்கம் செய்துள்ளனர். அம்முறையிற் செய்யப் பெற்ற கல்லறைகள் பிரமிட்டுக்கள் என அழைக்கப்பட்டன.

அவ்வாறே பண்டைத் தமிழகத்திலும் போர் முனையில் வீரமரணம் எய்திய மாவீரர்களுக்கும் அரசர்களுக்கும் நினைவுச் சின்னம் எழுப்பி, வீரவணக்கம் செலுத்தியுள்ளனர். மக்கள் நெஞ்சங்களில் இடங்கொண்ட சான்றோரைப் போற்றி, நடுகல் வழிபாடாற்றிய செய்தி பழந்தமிழ் நூல்களில் உண்டு. இவ்வாறான செய்திகளைச் செந்தமிழ்க் காப்பியங்களும் சங்கப் பாடல்களும் அழகொழுகச் செப்புகின்றன. நாட்டினைக் காத்த நற்றமிழ் மன்னனின் மற வலிமையைக் கூறவந்த திருவள்ளுவர்,



"என்னை முன் நில்லன் மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர்"

(ஐ—தலைவன்; தெவ்விர் —பகைவர்)

எனக் குறிப்பிட்டுள்ளார். "பகைவரே! என்னுடைய தலைவன் முன் எதிர்த்து நிற்காதீர்கள். அவர் முன் எதிர்த்ததால் மடிந்து கல்வடிவாய் நின்றவர் பலர்" என்பது மேற் போந்த குறட்பாவின் கருத்தாகும். மன்னனின் மறவலிமை அறியாது அவனுடன் போரிட்டுப் பலர் மடிந்து போயினர். அவ்வாறு மடிந்தவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்பப்பெற்று அவர்களின் பெயரும் புகழும் அவற்றில் பொறித்துப் போற்றப்படுவதையே "நடுகல் நாட்டல்" எனப் புறப்பாடல் புகழ்ந்துரைக்கும்.

மேலும், போர் மறவர்களுக்கு நடுகல் நாட்டி வீரவணக்கம் செலுத்திய பாங்கைக் குறிப்பிடுகையில்—

"காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்"

எனப் புறத்திணையியலில் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

உயிர் நீத்த வீரரின் நினைவாக நாட்டுதற்குத் தெரிந்தெடுத்த கல்லை நீராட்டி, பெயர் பொறித்து, மாலை சூட்டி, நடுகல் நடுவதை—

"அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து
இனிநட்டனரே கல்லும்"

எனப் புறநானூற்றிலும்,

'' ஆடவர் பீடும் பெயரும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் ''

என அகனானூற்றிலும் குறிப்பிட்டுள்ளமை நோக்கற் பாலது.

செயற்கருஞ் செயலில் முன்னின் றுழைத்த மாவீரரின் நினைவுக் குறியாக நடுகல் நட்டு வழிபாடாற்றிய செய்தி பழந்தமிழ் இலக்கியத்திற் பாக்கக் காணலாம்.

இந்த வகையிற் பழக்கப்பட்ட மக்கள் சிவனடியார் விடயத்திலும் கண்ணோட்டம் செலுத்தினர். சமய வாழ்வில் ஈடுபட்டுச் சிவசின்னம் அணிந்து ''மானிட யாக்கை வடிவு சிவலிங்கம்'' என மதிப்பது வீரசைவம். சிவத்தின் குறியாகிய சிவலிங்கத்தை அகத்திலும் புறத்திலும் வைத்து வழிபடும் சிவனடியாரை வீரசைவர் என்று சைவ உலகம் கூறும். இறையுணர்விற் குலையாத கொள்கையும் சலியாத சிந்தையும் வீரசைவத்தின் பண்புகளாகும்.

சிவலிங்கப் பெருமானைப் புறத்தில் வைத்துப் பூசித்து மனம் நிறைவுறாது, அங்கத்தில் அணிந்த வீரசைவர் சிவனுக்கு ஒப்பாவர். வாழ்நாள் முழுவதும் சிவசின்னம் தாங்கிச் சிவனை மறவாச் சிந்தையுடன் வாழும் வீரசைவரின் ஆன்மா, சிவமெனவே கருதப்படுகிறது. அவ்வான்மா பிரிந்த உடல் சிவன் கோயிலுக்கு ஒப்பானது. சிவனைப் பிரதிட்டை செய்த சிவன் கோயிலுக்கு யாரும் நெருப்பு வைப்பதில்லை. அவ்வாறே அகக்கோயிலில் சிவலிங்



கத்தைப் பூசித்த ஒருவரின் உடலுக்குத் தீ வைத்தல் கூடாது. பஞ்ச பூதங்களினால் ஆகிய உடலை அப் பஞ்ச பூதங்களும் உள்ள பூமியிற் புதைத்தாலே பூதங்கள் ஐந்தும் அவ்வக் கூறுகளுடன் சேரும் என்பது அறிவியல் துணிபு. சமய நோக்கும் அறிவியல் நோக்கும் இசைவுற அமைந்ததே வீரசைவரின் சமாதி வைக்கும் முறையாகும். வீரசைவர் உயிர் நீத்த பின்னர் அவர்களின் உடலுக்குத் தீ மூட்டுவதும் அதனைத் தொடர்ந்து பிண்டோதகக் கிரியை செய்வதும் முறையன்று.

மானிடதேகம் சிவலிங்க வடிவம் என்பதை மனதிற் கொண்டு சிவலிங்கதாரியாய் வாழ்பவர் சிவாலயத்துக்குச் சமமாவர். அகத்திலும் புறத்திலும் சிவனைக் கொலுவிருத்தி மகிழும் சிவனடியாரின் உடல் புனிதமானது. சிவசிந்தனையும் சிவவேடமும் தாங்கியிருந்த அவ்வுடல் உயிர் பிரிந்த பின் அதற்குத் தீ வைக்காது மண்ணிற் புதைப்பதே வழக்கமாயிற்று. வீரசைவரான சிவனடியார் சிவத்துடன் ஐக்கியமானதும் அவரது உடலை நீரினாலும் மந்திரத்தினாலும் தூய்மையாக்குதல் வேண்டும். பின்னர்—

'' அந்தமில் ஞானி யருளை யடைந்தக்கால்
அந்த வுடறான் குகை செய்திருத் திடிற்
சுந்தர மன்னரும் தொல்புவி யுள்ளோரும்
அந்தமி லின்ப வருள் பெறுவாரே ''

எனத் திருமந்திரத்திற் குறிப்பிட்டவாறு பூமியில் குகை செய்து, அதனுள் உடலைச் சமாதி வைத்தல் வேண்டும். மேலும்—

தேஷாம் சமாதி ஙிவைக்கிய நிஷ்டானாம் தகனாதி கர்ம |
நிஷித் தத்தியாத் சமாதி கிரியை வகர்தும் யுக்தா ||

சர்வகர்மா நிவிர்த்தஸ்ய தியான யோக ரதஸ்யச |
நதஸ்ய தகனம் கார்யம் நச பிண்டோதகக் கிரியா ||

என வீரசைவ அந்தியேஷ்டிகிரம நிருபணம், வேதாந்தசார சிந்தாமணி, உத்தரகாண்டம், 20 ஆம் பிரகரணத்திற் குறிப்பிட்டவாறு உயிர் நீத்த உடலைச் சிவ ரூபமாக்கி, பூமியில் நல்லடக்கம் செய்தல் வேண்டும். அவ்வுடலுக்குத் தீ மூட்டுதலும் ஆன்ம ஈடேற்றத்துக்காகப் பிண்டோதகக்கிரியை செய்தலும் ஆகாது.

உயிர் நீத்த வீரசைவரின் உடலை அதிக செலவின்றிப் பூமியில் நல்லடக்கம் செய்வதாயின், பூமியினுள்ளே நாலடிச் சதுரமாய்க் குடையப் பெற்ற கிடங்கினுள் அடியிலே உப்பைப் பரவிய பின், பத்மாசனத்தில் இருத்திய உடலை வலிமையுள்ள துணியில் வைத்துக் கீழே இறக்கி, உரிய இடத்தில் அதனைக் கொண்டுபோய் வைக்க வேண்டும். பின்பு உடலைச் சுற்றி உப்பு, நெல், விபூதி என்பவற்றால் கழுத்து வரை நிரப்புதல் வேண்டும். கண்டத்திலிருந்து தலைக்கு மேல் வரையிலாவது தனி விபூதியால் மூடி, நிரப்பிய பின், அதன் மேல் சட்டியோ குண்டானோ கவிழ்த்துக் குழியை முற்றாக மூடி விடுதல் முறையாகும்.

அவ்வாறின்றி, புதை குழியில் நினைவுக் குறியாகக் கட்டடம் ஒன்று அமைப்பதாயின், நிலத்திலே முக்கோண அமைப்பில் குழி ஒன்று வெட்டி அடியிலே உப்புப் பரப்பப்படும். பின் முக்கோண வடிவாகத் துணியில் தைக்கப்பட்ட பையினுள் இருத்திய நிலையில் உடலை வைத்துக் கிடங்கினுள் கீழே இறக்குதல் வேண்டும். அவ்வாறு இறக்கிய பின் உடலைச் சுற்றி மேற் குறிப்பிட்ட மாதிரி விபூதி,



உப்பு, நெல் முதலியவற்றால் நிரப்புதல் வேண்டும். அவ்விதம் நிரப்பப்பட்ட குழி மண்ணினாலும் சாந்தினாலும் மூடிக் கட்டப்படும். சமாதி கட்டப்பட்ட உடலின் தலை உச்சிக்கு மேல் உயரமாக ஒரு பீடம் அமைக்கப்படும். அப்பீடத்தில் நினைவுக் குறியாக நடுகல், அல்லது சிவலிங்கம் ஒன்றை வைத்துப் பிரதிட்டை செய்வது வழக்கம்.

இம்மாதிரி நினைவுக் குறியாக எழுப்பப்பட்ட வீரசைவர்களின் சமாதிகள் யாழ்ப்பாணத்திலே மயிலிட்டி, அளவெட்டி, உரும்பிராய், கீரிமலை, சரசாலை ஆகிய இடங்களில் அமைக்கப் பெற்றுள்ளன.

---

## மூன்றாம் குழிக் கிரியை

சிவ சிந்தனையுடன் வாழ்ந்து உயிர் நீத்த வீரசைவரின் உடல் சிவசொரூபமானது. அதனால் அவ்வுடலைப் புதைத்த சமாதிக் குழியும் சிவசம்பந்தமானது. எனவே அச்சமாதிக் குழிக்குச் செய்யும் பூசை, வழிபாடுகள் விசேட சமயச் சடங்காகக் கொள்வது வீரசைவர்களின் மரபாகும்.

சிவ ஐக்கியமான வீரசைவர் ஒருவரின் உடலை மண்ணிற் சமாதி வைத்த மூன்றாம் நாள் சமாதிக் குழியிற் செய்யப்படும் கிரியை, **மூன்றாம் குழிக் கிரியை** எனப்படும். இக்கிரியை சிவ ஐக்கிய மானவரின்

ஆன்ம நன்மை கருதி, அவ்வான்மாவைத் தாங்கிய உடலைப் புதைத்த சமாதிக் குழியில் மூன்றாம் நாள் செய்யப்படுவதால் அதனை மூன்றாம் குழி என்று பொதுவாகக் கூறுவர்.

சமாதிக் கிரியை அன்று வீட்டில் வைக்கப்பட்ட சிவலிங்கத்துக்கு மூன்று நாட்கள் வரை தொடர்ந்து பூசை செய்யப்படும். மூன்றாம் நாள் அந்த இலிங்கத்தை நடு நாயகமாகக் கொண்டு அதனுடன் வேறும் நான்கு இலிங்கங்களைச் சேர்த்து, பஞ்சலிங்கங்களுடன் நந்தியந்தேவர், வயிரவர் ஆகிய தெய்வ வடிவங்களை உருவாக்கி அவ்வத் தெய்வங்களை அவற்றில் ஆவாகித்தற் பொருட்டுச் சாணம் முதலியவற்றால் சுத்தப்படுத்திய வீட்டில் புண்ணியாகவாசனம் முடித்து, உருத்திர கும்பத் தாபனம் செய்யப்படும். அப்பொழுது கர்த்தாவுக்கு * இடது தோளில் பூணூல் அணியப்படுகிறது.

பிறகு உருத்திர கும்ப பூசை முடிந்ததும் அதனையும் மேற் சொல்லிய தெய்வச் சிலைகளையும் அபிடேகத் திரவியங்கள், நிவேதனப் பொருள்கள், பத்திர புட்பங்கள் ஆகியவற்றையும் எடுத்துக் கொண்டு மணி, சேமக்கலம், சங்கு முதலிய வாத்தியங்கள் முழங்கப் பண்ணிசை ஒலியோடு வீரசைவக் குரு கர்த்தாவுடன் சேர்ந்து சமாதிக் குழி அமைந்துள்ள இடத்துக்கு உரிமைக்காரர்கள் செல்வர்.

* வீரசைவ சமாதிக் கிரியையும் அதனுடன் தொடர்பு பட்ட ஏனைய கிரியைகள் எல்லாம் பூர்வபரக் கிரியைகளாகக் கொள்வது வீரசைவ மரபு.



அங்கு குழியின் மேல் சதுர மேடை ஒன்று முதலில் அமைக்கப்படும். பிறகு தான (இடம்) சுத்தி செய்து, கோலமிடப்படும். கோலமிட்ட கோட்டத்தில் நான்குபெருந் திசைக்கும் நான்கு இலிங்கங்களையும் நடுவே நாயக இலிங்கத்தையும் கோமுகை வடக்கு நோக்கி இருக்கத் தாபனஞ் செய்தல் வேண்டும். பின்—

சாமதி கிழக்குத் திசை நோக்கியதாயின், ஈசான திசையில் வயிரவரையும் அக்கினி திசையில் (தென் கிழக்கில்) நந்தியந் தேவரையும் தாபனம் செய்ய வேண்டும்.

சமாதி வட திசை நோக்கியதாயின், வாயு திசையில் (வடமேற்கில்) வயிரவரையும் ஈசான திசையில் நந்தியந்தேவரையும் தாபனம் செய்ய வேண்டும்.

தெய்வச் சிலைகள் யாவும் தாபனம் செய்த பின்னர் அவற்றை நாயக இலிங்கத்துடன் நூலிட்டு நாடி சந்தானம் செய்யப்படும்.

அதன்பின், திருவுருவங்களுக்கு நல்லெண்ணெய் பஞ்சகவ்வியம், அபிடேகத் திரவியங்கள், பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு, பழரசம், இளநீர், சந்தனம் ஆகியவற்றால் அபிடேகித்த பின்னர், உருத்திர கும்ப அபிடேகம் செய்யப்படும். பிறகு பட்டு, விபூதி, சந்தனம், அட்சதை, மலர் ஆகியவை அணியப்படும்.

அலங்காராதிகள் யாவும் செய்த பின் நிவேதனம் படைத்து, அர்ச்சித்து, தீப தூபோபசாரங்கள் செய்யப்படும். அதனைத் தொடர்ந்து திருமுறை ஓதி, தானம் அளித்து, வாழ்த்துக் கூறி, இலிங்க ஐக்கியமானவர் நற்பேறடைய வேண்டுமெனப் பிரார்த்திக்கப்படும்.

ஈற்றில் குரு உபசாரத்துடன் இக்கிரியை நிறைவுறும்.

"மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமாகாதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத்தானை
நினையுமா வல்லி ராகில் உய்யலாம் நெஞ்சினீரே"

— அப்பர் தேவாரம்.

---

## மோட்ச தீபக் கிரியை

பத்தனாய்ப் பாடமாட்டேன் பரமனே பரமயோகி
எத்தினாற் பத்திசெய்கேன் என்னை நீ இகழவேண்டாம்
முத்தனே முதல்வாதில்லை அம்பலத் தாடுகின்ற
அத்தாவுன் ஆடல்காண்பான் அடியனேன் வந்தவாறே.

— அப்பர் தேவாரம்

வீரசைவர்களின் சமாதிக் கிரியையுடன் தொடர்புடைய இறுதியானதும் உயர்நிலையானதுமான கிரியை, மோட்ச தீபக் கிரியை ஆகும். சிவஐக்கியமான ஆன்மாவாகிய சீவசோதி பரமாத்மாவாகிய சிவசோதியுடன் கலந்து, கற்பூர சோதிபோல் எச்சமின்றி மறைந்து போவதைப் பாவனையாகக் காட்டுவது மோட்ச தீபக் கிரியை எனப்படும்.



சைவ சமயத்தில் தனித்துவமான கோட்பாடுகளைத் தன்னகத்தே கொண்ட வீரசைவம் உலகத்தார் அனுட்டிக்கும் விதிமுறைகளிலிருந்து வேறுபட்ட நடைமுறைகளைக் கொண்டிருக்கும். இலிங்காயதர்களுக்கு உலகோர்கைக்கொள்ளும் ஆசௌச நியமம் இல்லை. ஆயினும், உலகாசாரப்படி அவர்கள் (இலிங்காயதர்) பதினொரு நாட்களும் ஏனையோர் பதினாறு நாட்களும் ஆசௌசம் காப்பர். இந்த ஆசௌச நாட்கள் ஜனன, மரண ஆசௌசங்கள் இரண்டுக்கும் பொருந்தும்.

வீரசைவர் ஒருவர் சிவப்பேறெய்தியது தொடர்பிலான ஆசௌச முடிவிலன்று உலகோர் அந்தியேட்டி என்று சாதாரணமாகக் கூறும் மோட்ச தீபம் வைப்பதாகிய முக்கிய நிகழ்ச்சி இடம் பெறும். இந்நிகழ்ச்சி சீவசோதி சிவசோதியுடன் ஐக்கியமாதலைச் சுட்டுகின்றது.

மோட்ச தீபம் சார்ந்த கிரியை மற்றையோருக்கான கிரியைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருக்கும். அக்கிரியைசெய்தற்கு கிழக்கு முகமாக மண்டபம் வகுத்து, அதனை மாவிலை, மகர தோறணங்களால் அலங்கரித்து, அதன் நடுவே வேதிகையும் பஞ்ச கும்பங்களும் வைக்கப்படும்.

வேதிகைக்கு முன்னிலையில் நந்தி கும்பம், உருத்திர கும்பம், மோட்ச தீபக் கும்பம் என்பனவும் ஈசானத்தில் சிவம் வர்த்தனி கும்பங்களும் வைக்க வேண்டும். மண்டப வேதிகையைச் சுற்றி எட்டுத் திசைகளிலும் அட்டதிக்குப் பாலகர்களுக்கான கும்பங்களுடன் நிருது திசைக்கும் வருண திசைக்கும்

இடையே விஷ்ணு கும்பமும் ஈசான திசைக்கும் இந்திர திசைக்கும் இடையே பிரம கும்பமுமாகப் பத்துத் திசைகளுக்கும் தச ( பத்து ) திக்குப் பாலகர் கும்பங்கள் வைப்பது வழக்கம்.

இக்கிரியை ஆரம்பமாவதற்கு முன் இதற்கென ஏற்பாடு செய்த வீரசைவ சிவசாரியரைக் கிரியா மண்டபத்துக்கு வெளியிலிருந்து அழைத்து வருதல் மரபு. மங்கள வாத்தியங்கள் ஒலிக்க,உபசாரத்துடன் குருவைக் கிரியா மண்டபத்துக்கு உரிமையாளர் அழைத்து வருவதைப் பன்னளயம் அழைத்தல் என்பர். அவ்வாறு எழுந்தருளி வந்த சிவாசாரியாருடைய திருவடிகளை நீராட்டி, தூப தீப ஆராத்திகள் எடுத்த பின்னர், திருவடி நீராட்டியபோது பெற்ற பாதோதகத்தை ( பாத + உதகம் – திருவடி நீரை ) உரிமையாளரும் அவரது சுற்றத்தாரும் அருமருந்தென அருந்துவர்.

அதன்மேல் சிவாசாரியர் கிரியா மண்டபத்துள் புகுந்து, அவருக்கென அளிக்கப்பட்ட ஆசனத்தில் இருப்பார். பின்பு அன்றைய கிரியை ஆரம்பிக்கு முகமாக மணியை அடித்துச் சங்கற்பித்துப் புண்ணியாக வாசனம் செய்யப்படும். அதனைத்தொடர்ந்து இக்கிரியை பூர்வபரம் ஆனதால், * கர்த்தாவின் இடதுதோளில் பூணூல் அணியப்படும்.

* வீரசைவர்களின் சமாதி, மூன்றாம் குழி, மோட்ச தீபக் கிரியைகள் மூன்றிலும் கர்த்தாவின் இடது தோளிலேயே பூணூல் அணிதல் வேண்டும். அத்துடன் கிரியா மண்டபத்துள் வலம்-இடமாகச் சுற்றி வருவதும் முக்கியமாகக் கடைப்பிடிப்பது வழக்கம்.



அடுத்து, தச திக்குப் பாலகர் கும்ப பூசை நடைபெற்று, யாக-யாகேஸ்வரி ஆகிய சிவம் வர்த்தனி கும்ப பூசையும் இடம் பெறும். பின்பு பஞ்ச கும்ப பூசை, உருத்திர கும்ப பூசை, மோட்ச தீப கும்ப பூசைகள் முறையே செய்யப்படும். பின்பு ஓமாக்கினி வளர்த்து, சூர்ணோத்சவம் நிகழும்,

பிறகு ஒற்றை எண்கொண்ட இலிங்காயதர்களை வரித்து, ஐவர்களாயின் ஈஸ்வர, மகேஸ்வர, சதாசிவ, உருத்திர, பரசிவ மூர்த்திகளாகப் பாவித்து, முதலில் பாதபூசை செய்தல் வேண்டும். ஐவருக்குமேல் பதினொருவராயின், அவர்களை * ஏகாதச உருத்திரர்களாகப் பாவித்து வழிபடுதல் வேண்டும். பின்பு அவர்கள் அணிந்திருக்கும் சிவலிங்கப் பெருமானுக்குப் பூசை செய்து, சிவஐக்கியமான ஆன்மாவுக்கு நற்பேறு கிட்ட அருள்செய்ய வேண்டுமென்று கர்த்தா வேண்டிப் பணிவார்.

இலிங்காயதர்கள் தமது இட்டலிங்கப் பெருமானுக்கு அபிடேகப் பொருள்களினாலும் முன்னரே வைத்துப் பூசிக்கப் பெற்ற உருத்திர கும்ப நீரினாலும் முறைப்படி அபிடேகம் செய்வர். பின்பு பட்டு,

* ஏகாதச உருத்திரர் - பதினொரு உருத்திரர். அவர்களாவோர் வருமாறு : மகாதேவ ருத்திரன், சிவருத்திரன், உருத்திர ருத்திரன், சங்கர ருத்திரன், நீலலோகித ருத்திரன், ஈசான ருத்திரன், விஜய ருத்திரன், பீம ருத்திரன், தேவதேவ ருத்திரன். பவோத்பவ ருத்திரன், கபாலீச ருத்திரன்.

பத்திர புட்பங்கள் சாத்தப்படும். அதனைத்தொடர்ந்து நிவேதனம், அருச்சனை, தூபாதி உபசாரங்களை உரிமையாளர் செய்வார்.

அப்பொழுது முன்னரே தயாரிக்கப் பெற்ற மாவினாலான நெய்விளக்கில் திரியிட்டு, சிவபூசையிற் காட்டப்பெற்ற கற்பூர சோதியிலிருந்து பிறிதொரு கற்பூரத்தைக் கொழுத்தி அந்நெய்விளக்கை உரிமையாளர் ஏற்றுவார். அதனையே மோட்ச தீபமாக எடுத்து, மோட்ச தீப கும்பத்தின்முன் அவரே வைப்பார். ஈற்றில் சிவபூசை செய்த சிவாசாரியர், மற்றும் இலிங்காயதர்களை உரிமையாளர் உபசரித்து வணங்கி அவர்களின் வாழ்த்தைப் பெறுதல் கடனாகும்.

பின்னர் மண்டபத்தில் நிவேதனாதிகளைப் படைத்துச் சோடசோபசார பூசைநிகழும். அதனைத் தொடர்ந்து பஞ்சாசாரியர் தோத்திரமும் திருமுறை ஓதலும் நடைபெறும். அதன்பின் மோட்ச விளக்கைச் சிவாசாரியர் எடுத்துக் கர்த்தாவின் கையிற் கொடுப்பார்.

கர்த்தா அதனை வாங்கிச் சுற்றத்தார் சூழத் தலையிற் சுமந்துகொண்டு ஏதாவதொரு சிவாலயத்துக்குச் செல்வார்.

அங்கு அவ்விளக்கு எடுத்துவந்த செய்தியைக் கர்த்தா கூறுதலும், அதற்கான காரணம் என்னவென வினவி, குருவும் சீடனும் உரையாடுவதாக அமைந்த மோட்ச தீபப் பாடல்களைப் படிப்பது ஒரு சிறப்பு நிகழ்ச்சி ஆகும்.



அதன்பின் அவ்வாலயத்தில் இருக்கும் மூலவரின் பாதத்தின் கீழ் அவ்விளக்கை வைக்குமாறு கர்த்தா குருவை வேண்டிக்கொள்வார். குரு அதற்கிணங்கி, விளக்கை வாங்கிச் சென்று மூலவரின் பாதத்தின் கீழ் வைத்துக் கற்பூர ஆராத்தி காட்டுவார்.

ஆலயத்தினுள்ளே விளக்கு வைப்பதும் கற்பூர ஆராத்தி காட்டுவதுமாகிய நிகழ்ச்சி சீவசோதி சிவசோதியுடன் கலந்து ஐக்கியமாதலை எடுத்துக் காட்டும். சிவசீவக் கலப்பைக் காட்டும் இந்நிகழ்வு மோட்ச தீபக்கிரியையின் உச்சநிலையைக் குறிக்கின்றது.

''கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாய நமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூர் அரனே.''

— அப்பர் தேவாரம்

சீவான்மா சிவகதி அடைதல் என்பதைச் சுட்டுகின்ற மோட்ச விளக்கு வைத்தபின், ஆசாரியருக்கு உபசாரம் செய்து வாழ்த்துப் பெறுவதுடன் இப் புண்ணிய கைங்கரியம் நிறைவுறும்.

வீரசைவக் கிரியை எதுவாயினும் அதன் ஈற்றில் சங்கமர்களின் ஆசி வேண்டி வாழ்த்திசைப்பது மரபு.

''ஈசா னனனே சரணம் சரணம்
இறைவா நிறைவா சரணம் சரணம்
ஆசா ரியனே சரணம் சரணம்
* அபிடா க்ஷரமே சரணம் சரணம்

* மகுடா க்ஷரமே என்றும் பாடம்.

பேசா மொழியே சரணம் சரணம்
பேரின் பவமே சரணம் சரணம்
வாசா மனனே சரணம் சரணம்
வசவே சுரனே சரணம் சரணம்''

* * *

''பாருல கத்தோர் வாழ்கப் பரமர்தன் அடியர் வாழ்க
சீர்பெறும் அன்னை சுற்றம் திகழவே வாழ்க வாழ்க
கூர்மழு வேந்துங் கையிற் குருமலர்ப் பாதம் போற்றி
வீரசைவத்தோர் வாழ்க விண்ணவர் வாழ்கத் தானே
பஞ்சமடம் பன்னீராயிர மகாமடத்துக்கும் குருலிங்க
சங்கமத்துக்கும் அல்லமாப்பிரபு தேவர்க்கும்
[சிவசரண சரணார்த்தி''

— பழைய பாடல்கள்

* * *

''மாரி பெய்க மநுநெறி யோங்குக
பாரி லொண்சிவ பக்தர்கள் மல்குக
சீரின் மல்குஞ் சிவன்புகழ் வெல்குக
வீர சைவம் விளங்குக வெங்குமே!''

— கலி விருத்தம்

---

உ

## உசாத்துணை நூல்கள்


1. வீரசைவம்
   - மாதச் சஞ்சிகை, முசிரி, திருச்சி (மாவட்டம்), 1930, 1931
2. வீரசைவம்
   - டாக்டர், புலவர் வை. இரத்தினசபாபதி, M. A, Ph. D., சென்னைப் பல்கலைக்கழகம், 1977
3. வீரசைவம் அல்லது இலிங்காயதம்
   - க. நவரத்தினம், 1950





4. வீரசைவமும் சைவமும்
   - நல். முருகேச முதலியார், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1987
5. யாழ்ப்பாணத்து வீரசைவர்
   - த. சண்முகசுந்தரம், B. A. Dip. in Ed. மாவைக் கந்தசாமி கோவிலடி, தெல்லிப்பழை, 1983
6. கலைக்களஞ்சியம்
   - தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை
7. பிரபுலிங்க லீலை
   - சிவப்பிரகாச சுவாமிகள், தர்மகர்த்தத்துவ வெளியீடு, 1934
8. சித்தாந்த சிகாமணி
   - தமிழில், சிவப்பிரகாச சுவாமிகள், தர்மகர்த்தத்துவ வெளியீடு
9. வசவ புராணம்
   - தமிழாக்கம் - பெயர் தெரியவில்லை, ஸ்ரீமத் நாகிரெட்டியார் உரை, 1931
10. தொல்காப்பியம்
    - பொருளதிகாரம் பாகம் I, II பதிப்பு, S. வையாபுரிப்பிள்ளை, சென்னை, 1935
11. திருமந்திரம்
    - T. C. பார்த்தசாரதி யோகியார் குறிப்புரை, சென்னை, 1940
12. திருவாசக ஆராய்ச்சி
    - சங்க நூற் செல்வர், சு. அருளம்பலவனார், காரைநகர், 1973
13. திருவருட்பயன்
    - உரை, சைவப் பெரியார் சு. சிவபாதசுந்தரம் B. A, 1978
14. சைவக்கிரியை விளக்கம்
    - சைவப் பெரியார் சு. சிவபாதசுந்தரம் B. A., 1978

15. சைவநெறி
- சிதம்பரம், மறைஞான சம்பந்தநாயனார்,
புத்துரை, யா / நல்லூர் ஆறுமுகநாவலர்,
ஏழாம் பதிப்பு

16. ஞானபூமி
- மாதச் சஞ்சிகை, தமிழ்நாடு

17. ஶ்ரீ குமாரதேவர் சாஸ்திரக்கோவை
- பி. நா, சி. பிரதர்ஸ், சென்னை, 1923

18. இலிங்கோப நிடதமும் தமிழ் தாற்பரியமும்
- வண்ணை சிவ. ஐயம்பிள்ளைக் குருக்கள்,
கீரிமலை, 1965

19. தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு
- மூலமும் மெய்கண்ட விருத்தியுரையும்,
சென்னை, 1930

20. திருஞானசம்பந்தர் தேவாரம்

21. திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்

22. புறநானூறு

23. சிவஶ்ரீ ஐ. செல்வரத்தினக் குருக்களவர்களின்
- சிவைக்கிய ஞாபகார்த்த வெளியீடு,
உரும்பிராய், 1978.

* * *

## இந்நூல் வெளிவர ஊக்கமளித்தவர்கள்

1. திரு து. கிருபாகரன்
2. திரு. க. சபாரத்தினம்
3. திரு. சு. பரராசசிங்கம்
4. திரு. மு நாகராசா
5. சிவத்திரு சோ. சந்திரசிகாமணிக் குருக்கள்